# தர்மசக்கரம்





காளயுக்தி ஞு வைகாசி மீ சக்கரம் 27 ஆரம் 5

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்
திருப்பராய்த்துறை - 639 115 திருச்சி ஜில்லா

# குற்றாலத்தில் பருவ அந்தர்யோகம்

## 15-6-1978 முதல் 15-8-1978 முடிய

திருக்குற்றாலம் ஐந்தருவி ஸ்ரீ ராமகிருஷ்ண ஆச்ரமத்தில் 1978ஆம் ஆண்டு ஜூன் மாதம் 15ஆம் தேதி முதல் ஆகஸ்ட் மாதம் 15ஆம் தேதி முடிய இரண்டு மாதங்களுக்குக் கீழ்க்கண்ட சாதனைமுறைப்படி அந்தர்யோகம் நடைபெறும். ஏக காலத்தில் இருபது பேர்களுக்கு மேற்படாமல் ஆச்ரமத்தில் தங்குவதற்கும் உணவிற்கும் வசதி செய்வது சாத்தியமாகும். ஒருவர் மூன்று தினங்களுக்குக் குறையாமலும் பத்துத் தினங்களுக்கு மேற்படாமலும் இந்த இரண்டு மாதங்களுக்கு நடைபெறும் அந்தர்யோகத்தில் கலந்துகொள்ள அனுமதிக்கப்படுவார். எந்தத் தேதிகளில் தாம் கலந்துகொள்வதற்கு விரும்புகிறார் என்பதைக் கடிதமூலம் குற்றாலத்துக்கு எழுதி முற்கூட்டி அனுமதி பெற்றுக்கொள்க. உணவுக்காக நாள் ஒன்றுக்கு ரூபாய் ஏழரை வீதம் ஆச்ரமத்துக்கு வந்த பின்பு நேரில் செலுத்தினால் போதுமானது. படுக்கை வசதிக்குத் தேவையானதை உடன் கொண்டுவரவேண்டும்.

### சாதனை முறை

**காலை**

| | மணிமுதல் | மணிவரை |
|---|---|---|
| திருப்பள்ளியெழுச்சி, தியானம், நாமஜபம் | 4-30 | 5-30 |
| ஐந்தருவி ஸ்நானம் | 5-30 | 7-00 |
| தியானம் | 7-00 | 7-30 |
| சிற்றுண்டி | 7-30 | |
| பஜனை | 10-00 | 10-30 |
| உபந்யாசம் | 10-30 | 11-00 |
| தியானம் | 11-00 | 11-15 |
| அர்ச்சனை, தீபாராதனை | 11-15 | 11-30 |
| உணவு | 12-00 | |

**மாலை**

| | மணிமுதல் | மணிவரை |
|---|---|---|
| பஜனை | 3-00 | 3-30 |
| உபந்யாசம் | 3-30 | 4-00 |
| தியானம் | 4-00 | 4-15 |
| சிற்றுண்டி | 4-15 | |
| நாமபஜனை, ஆரத்திரிகம் | 6-30 | 7-00 |
| தியானம் | 7-00 | 7-30 |
| உணவு | 7-30 | |
| ஸத் ஸம்பாஷணை | 8-00 | 8-30 |

**ஸ்ரீ ராமகிருஷ்ண ஆச்ரமம்** **சுவாமி குஹானந்தர்**

குற்றாலம்-627 802, (வழி) தென்காசி

# தர்ம சக்கரம்

Acc. No. 38675

மாத சஞ்சிகை

| சக்கரம் 27 | காளயுக்தி ௵ வைகாசி ீ | ஆரம் 5 |
|---|---|---|

## பொருளடக்கம்

பக்கம்




## சந்தா விவரம்

### 1. டிபாஸிட் சந்தா ரூ. 100

ரூ. 100 அனுப்பி இங்கு டிபாஸிட் செய்து விட்டால் டிபாஸிட் இங்கு இருக்கும் வரையில் மாதந்தோறும் தர்மசக்கர பத்திரிகை தங்களுக்கு வந்துகொண்டிருக்கும். ஆண்டுதோறும் சந்தா செலுத்தி புதுப்பிக்க வேண்டியதில்லை. பத்திரிகை வேண்டாம் என்று கருதும்பொழுது டிபாஸிட் செய்த ரூபாய் நூறையும் திரும்பப் பெற்றுக்கொள்ளலாம். இந்தத் திட்டம் உள்நாட்டுக்கு மட்டும் உரியது.

### 2. ஆண்டு சந்தா ரூ. 10

ரூ. 10 செலுத்தியது முதல் அல்லது அடுத்த மாதம் முதல் பன்னிரண்டு மாதங்களுக்கு ஒவ்வொரு தமிழ் மாதமும் முதல் தேதியில் கிடைக்கும்படி பத்திரிகை அனுப்பப்படுகிறது.

### 3. சகாய சந்தா ரூ. 5

தர்ம சக்கரம் அடக்க விலைக்கு வெளியிடப்படுகிறது. ஆண்டு சந்தா ரூபாய் பத்து செலுத்த இயலாதவர்கள் ரூபாய் ஐந்து மட்டும் அனுப்பலாம். பாக்கி ரூபாய் ஐந்தைப் பாண்டிச்சேரி S. விஸ்வநாதன் 'தர்ம சக்கர உதவி நிதி' யினின்று ஈடுசெய்து கொள்கிறோம். தெய்வீக விஷயமாதலால் ரூபாய் பத்து செலுத்த இயலுகிறவர்கள் இந்தச் சலுகையைப் பயன்படுத்த வேண்டாம்.

**உள்நாடு தனி இதழ் ரூ. 1-00. வெளிநாடு வருட சந்தா ரூ. 20-00**

## அந்தர்யோக விவரங்கள்

திருநெல்வேலி ஜில்லா—கல்லிடைக்குறிச்சியில் 21—5—78 ஞாயிற்றுக்கிழமை

**இடம்:** அகஸ்தியர் கோவில்

**நேரம்:** காலை 9-30 மணிமுதல் மாலை 4-30 மணிவரை

**நடத்துபவர்:** ஸ்ரீமத் சுவாமி பரானந்தர்

கன்னியாகுமரியில் 27, 28—5—78 சனி, ஞாயிற்றுக்கிழமைகளில்

**இடம்:** ஸ்ரீ பகவதி அம்மன் கோயில்.

**நேரம்:** அதிகாலை 5-00 மணிமுதல் இரவு 10-00 மணிவரை வழக்கமான சாதனை முறைப்படி நடைபெறும்.

**நடத்துபவர்:** ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**இதர விவரங்கள்:** சித்திரை மாதம் சக்கரம் 27 ஆரம் 4-இல் உள்ள அட்டையின் இரண்டாம் பக்கம் பார்த்து வேண்டிய விவரங்களைத் தெரிந்து கொள்ளுங்கள்.

மதுரை ஜில்லா—திருமங்கலத்தில் 28—5—78 ஞாயிற்றுக்கிழமை

**இடம்:** ஸ்ரீ ராமகிருஷ்ண-விவேகானந்த தபோவனம்

**நேரம்:** காலை 10-00 மணிமுதல் மாலை 4-15 மணிவரை

**நடத்துபவர்:** ஸ்ரீமத் சுவாமி அசலானந்தர்

கோவை ஜில்லா—சித்திரச்சாவடியில் 4—6—78 ஞாயிற்றுக்கிழமை

**இடம்:** ஸ்ரீ ராமகிருஷ்ண-விவேகானந்த ஆச்ரமம்

**நேரம்:** காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை

**நடத்துபவர்:** ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்

**உணவு வசதி:** நேரில் பகல் உணவிற்கு ரூ. 1-00ம் மாலை சிற்றுண்டிக்கு 75 பைசாவும் செலுத்தி சீட்டுப் பெற்றுக்கொள்ளலாம்.

சேலம் ஜில்லா—ராசிபுரத்தில் 4—6—78 ஞாயிற்றுக்கிழமை

**இடம்:** தெய்வீக வாழ்க்கைச் சங்கம்

**நேரம்:** காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை

**நடத்துபவர்:** ஸ்ரீமத் சுவாமி ஆத்மானந்தர்

ராமநாதபுரம் ஜில்லா—பள்ளத்தூரில் 11—6—78 ஞாயிற்றுக்கிழமை

**இடம்:** சிவன் கோவில்

**நேரம்:** காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை

**நடத்துபவர்:** ஸ்ரீமத் சுவாமி குஹானந்தர்

**உணவு வசதி:** நேரில் ரூ. 1-25 செலுத்தி சீட்டுப் பெற்றுக்கொள்ளலாம்.

ராமநாதபுரம் ஜில்லா—அருப்புக்கோட்டையில் 11—6—78 ஞாயிற்றுக்கிழமை

**இடம்:** தேவாங்கர் உயர்நிலைப்பள்ளி

**நேரம்:** காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை

**நடத்துபவர்:** ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

மதுரை ஜில்லா—உசிலம்பட்டியில் 11—6—78 ஞாயிற்றுக்கிழமை

**இடம்:** நாடார் சரஸ்வதி உயர்நிலைப்பள்ளி

**நேரம்:** காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை

**நடத்துபவர்:** ஸ்ரீமத் சுவாமி அசலானந்தர்

**உணவு வசதி:** நேரில் ரூ. 1-25 செலுத்தி சீட்டுப் பெற்றுக்கொள்ளலாம்.







प्रज्ञानं ब्रह्म

# தர்ம சக்கரம்

அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்(கு) அல்லால்
பிறவாழி நீந்தல் அரிது.



| சக்கரம் 27 | காளயுக்தி ஹு வைகாசி மீ | ஆரம் 5 |
|---|---|---|



## பிரார்த்தனை

अग्निर्यत्राभिमथ्यते वायुर्यत्राधिरुध्यते ।
सोमो यत्रातिरिच्यते तत्र संजायते मनः ॥

— श्वेताश्वतरोपनिषत्

அக்னிர்யத்ராபிமத்யதே வாயுர்யத்ராதிருத்யதே ।
ஸோமோ யத்ராதிரிச்யதே தத்ர ஸம்ஜாயதே மன: ॥

— ச்வேதாச்வதரோபநிஷத்

(ஞான)க்னியைக் கடைந்தெடுக்கிறபொழுது (யோகசாதனத்தால்) வாயுவை அடக்கியாளுகின்றபொழுது, (பக்தியால்) சோமபானம் வழியும்பொழுது மனது நிறைநிலை எய்துகிறது.

சிந்தை யவிழ்ந்தவிழ்ந்து சின்மயமா நின்னடிக்கே
வந்தவர்க்கே யின்பநிலை வாய்க்கும் பராபரமே.

— தாயுமானவர்

# அருள் விருந்து

வெற்றிக்கு வித்து சத்தியம்.

தெள்ளிய உள்ளம் உலகை ஆளவல்லது.

தீர்மானம் செய்கிறவனே நல்வினையில் ஈடுபடுகிறான்.

அறநெறி கடைப்பிடிப்பவனை யாரும் வெல்ல முடியாது.

நன்னெறியில் வேர்பிடித்திருப்பவன் விரைந்து வளர்கிறான்.

நல்வினை எது, தீவினை எது என்பதை வெளிப்படுத்துவது காலம்.

இலௌகிகப் பழக்கவழக்கங்கள் பரநாட்டத்துக்கு நிகராகமாட்டா.

கையாளும் நெறி நல்லதாயிருந்தால் அடையும் குறியும் நல்லதாகும்.

அரும்பெரும் கருத்துக்களே அரும்பெரும் செயல்களாக வடிவெடுக்கின்றன.

இறைவா, இளமைபூண்டுள்ளவனாக நீ யாண்டும் என் உள்ளத்தில் ஒளிர்கின்றாய்.

அறிவைத் தீட்டுவது ஏகாந்தம். பண்பைப் பெருக்குவது ஒழுங்கான உலக வியவகாரம்.

சந்தேகப்படுகிறவன் தளர்வுறுகிறான்; உறுதியாக நம்புகிறவன் திண்ணியன் ஆகிறான்.

உலக வைபவங்களுக்கு மிகைபட்ட மதிப்புத் தருவதே துன்பத்திற்குப் பிறப்பிடமாகிறது.

சன்மார்க்கத்துக்கு முரண்படுபவைகளோடு நீ இணங்காதே. சன்மார்க்கத்தையே நீ யாண்டும் கடைப்பிடி.

ஒருவனுடைய நல்லொழுக்கத்துக்கு இடைஞ்சலாக வாய்க்கின்ற கொடைகளை அவன் ஒருபொழுதும் ஏற்கலாகாது.

உடலை ஒரு மட்பாண்டம் போன்றும், உள்ளத்தை வஜ்ராயுதமாகவும் கருது. அப்பொழுது காமத்தை வெல்லுவது எளிது.

மனம், மொழி, மெய்யாகிய திரிகரணங்களைத் தூயதாக வைத்திருப்பவனுக்குப் பிறர்க்குத் தெரியாது மறைத்து வைப்பதற்கு ஒன்றுமில்லை.

## பரமஹம்சர் புகட்டிய

# பெருநெறி விளக்கம்

கல்கத்தாவில் சிந்தி என்னும் பகுதியில் இருந்த பிரம்மசமாஜத்தில் பரமஹம்சதேவர் கலந்துகொண்டு சங்கீர்த்தனம், ஆனந்தத் தாண்டவம் முதலிய தெய்விகச் செயல்களில் பங்குகொண்டார். அது முடிவுக்கு வந்த பிறகு பரமஹம்ச தேவரை விஜயர் அந்தப் புரத்துக்கு அழைத்துச் சென்றார். விஜயருடைய மாமியாரும் ஏனைய பிரம்மசமாஜத்து மகளிர்களும் பரமஹம்ச தேவரைச் சேவிப்பதற்காக அங்குக் காத்திருந்தனர். அன்னவர்களின் விருப்பத்தைப் பரமஹம்சதேவர் நிறைவேற்றி வைத்தார்.

சிறிது நேரத்திற்குப் பிறகு பரமஹம்ச தேவர் மகளிர் அமர்ந்திருந்த மண்டபத்தினின்று பழையபடி முன் மண்டபத்துக்கு வந்தார். அப்படி வந்தவர் விஜயரிடம் இங்ஙனம் இயம்பினார்: "உமது மாமியாரிடம் அளவு கடந்த பக்தி ததும்பிக் கொண்டிருக்கிறது! உலக வாழ்வைக் குறித்து அவ்வம்மையார் என்னிடம் இயம்பியதாவது: 'ஓ உலக விஷயம் எதையும் பற்றித் தாங்கள் என்னிடம் ஒன்றும் பகரவேண்டாம். கடலிலே ஓர் அலை அடங்குதற்கு முன்பு மற்றோர் அலை உருவெடுக்கிறது. உலக வியவகாரம் அத்தகையது.' அவ்வம்மையின் கருத்துக்கு மறுமொழியாக நான் 'அதைப் பற்றித் தாம் கவலைப்படுவானேன்? தம்மிடம் ஞானம் ஒளிர்ந்து கொண்டிருக்கிறது' என்று சொன்னேன். அவ்வம்மை மேலும் மொழிந்ததாவது: 'என்னுடைய ஞானத்தை எத்தகையது என்பேன். வித்யா மாயை அவித்யா மாயை ஆகிய இவ்விரண்டு பந்த பாசங்களுக்கு அப்பால் நான் சென்றவள் அல்லேன். அக்ஞான இருளைத்தாண்டி ஏதோ ஒரு படி மேலே போயிருந்தால் போதாது. ஞான ஒளியின் மேற்போக்கான அடையாளமாக அமைந்துள்ள அந்த அறிவு என்னைக் காப்பாற்றாது. வித்யா மாயையினுடைய கவர்ச்சிகரமான விசித்திரத்தையும் கடந்து அப்பால் செல்லுகின்றபொழுதே நான் உய்வு அடையப்பெற்றவள் ஆகிறேன். அந்நிலைதான் உண்மையான ஈசுவரசாட்சாத்காரம் ஆகிறது. தாங்கள் திருவாய் மலர்ந்தருளியுள்ள மேலாம் கோட்பாட்டையே பிரமாணமாக நான் தங்களிடம் எடுத்து இப்பொழுது இயம்புகிறேன்.' இந்தப் பாங்கில் உமது மாமியார் அடைந்துள்ள நிலையைக் குறித்து என்னிடம் விமரிசனம் பண்ணினார். இது சாமானியமான விமரிசனம் அன்று. பரதத்துவத்தைப் பற்றி அவர் எவ்வளவு தூரம் கிரஹித்து இருக்கிறார் என்பதற்கு இக்கூற்றே சான்றாகிறது."

இவர்கள் இங்ஙனம் பேசிக்கொண்டிருந்த பொழுது திருவாளர் பெனிபால் என்பார் மண்டபத்தினுள் வந்து சேர்ந்தார். அவர் தாம் அன்று மாலை அங்குக் குழுமியிருந்த அனைவரையும் உபசரிப்பதற்காக இருந்த அதிதிபதி ஆவார்.

பெனிபால் (விஜயரிடம்): "ஐயனே, எல்லாரும் மாடிக்கு எழுந்தருளுங்கள். இப்பொழுது ஒருவாறு காலதாமதம் ஆகியிருக்கிறது. வழிபாட்டை உடனே துவக்குங்கள்."

விஜயர்: "மேற்கொண்டு நாம் செய்யக்கிடக்கும் வழிபாடு யாது இருக்கிறது? பரமஹம்ச தேவர் வழங்கியுள்ள ஆனந்த பரவச நிலையை அனுபவித்து நாம் அனைவரும் அதில் திளைத்துப் போயிருக்கிறோம். மேற்கொண்டு வழிபாடு செய்வதற்கு உபமானமாக உண்டியைப் பற்றிய ஒரு கோட்பாட்டை நான் ஞாபகப்படுத்தக் கடமைப்பட்டிருக்கிறேன். உணவு ஏற்பவர்களுக்கு இறுதியில் வழங்குவது அருமையான பாயசம். அந்தப் பாயசத்தை எடுத்து ஆரம்பத்திலேயே வேண்டியவாறு வழங்கியாகி விட்டது. இனி சாம்பார் சாதம் போன்றவைகளுக்கு அவசியம் யாது உளது?"

பரமஹம்சதேவர் புன்னகை பூத்தவராக: "பக்தர்கள் தம் தம் இயல்புக்கேற்ப தெய்வத்துக்கு நைவேத்யம் படைக்கின்றனர். சாத்விக இயல்பு படைத்த பக்தர்கள் வெறும் பால் பாயசத்தை மட்டும் தெய்வத்துக்கு நைவேத்தியமாகப் படைக்கின்றனர். ரஜோ குணம் படைத்த பக்தர்கள் வித விதமாய்

அமைந்துள்ள ஐம்பது பட்சணங்களை நைவேத்யமாய்ப் படைக்கின்றனர். இனி, தமோ குணத்தில் ஊறிக் கிடக்கும் பக்தர்கள் ஆடு வெட்டி அதன் மாமிசத்தைப் பக்குவப்படுத்தித் தெய்வத்துக்குப் படைக்கின்றனர்.''

பிரம்மசமாஜத்தவருடைய வழிபாட்டு முறையைப் பீடத்தின் மீது அமர்ந்து கொண்டு நடாத்த விஜயர் தயங்கினர். "தேவரீர் எனக்கு ஆசீர்வாதம் வழங்கினல் மட்டுமே தங்களுடைய அனுமதியின் பேரில் நான் பீடத்தில் அமர்ந்து கொண்டு வழிபாட்டை நடாத்துவேன்,'' என்று அவர் பரமஹம்சதேவரிடம் இயம்பினர்.

பரமஹம்சதேவர்: ''உமது வழிபாட்டு முறையில் தோஷம் ஏதுமில்லை. உமது வழக்கத்துக்கொப்ப அதை முறையாக நடாத்துவீராக. மற்றவர்களை நல்வழியில் நடாத்தும் ஆச்சாரிய ஸ்தானத்தில் நான் இருக்கிறேன் என்னும் அகங்காரம் உள்ளத்தினுள் புகுந்து விடலாகாது. 'இப்பொழுது நான் ஹிதோபதேசம் செய்யப் போகிறேன் மற்றவர்கள் அதற்குச் செவிசாய்த்துக் கேளுங்கள்' என்கின்ற செருக்கோ, தற்பெருமையோ உள்ளத்தினுள் புகுந்து விடலாகாது. அகங்காரத்திற்குப் பிறப்பிடம் யாது? ஞானமா? அல்லது அக்ஞானமா? பணிவுடன் இருப்பவனே ஞானத்தை அடையப் பெறுகிறுன். மழைநீர் பள்ளத்தில் தேங்குகிறது. மேட்டிலிருந்து அது வழிந்து ஓடிவிடுகிறது. மேட்டுக்கு நிகர் தற்பெருமை. பள்ளத்திற்கு நிகர் பணிவு.

"அகங்காரத்தில் அழுந்திக் கிடக்கும் காலமெல்லாம் மானுடனெருவன் ஞானத்துக்கோ, முக்திக்கோ தகுதியுடையவன் ஆகமாட்டான். அகங்காரம் படைத்திருக்கிறவன் இப்பூவுலகில் திரும்பத் திரும்பப் பிறப்பெடுத்தாக வேண்டும். அகங்காரம் எத்தகையது என்பதற்குச் சான்று ஒன்றை எடுத்துக் காட்டலாம். 'ஹம்பா ஹம்பா' என்று கன்று குட்டியொன்று கத்துகிறது. அதன் கூப்பாடு 'நான் நான்' எனப் பொருள்படுகிறது. அத்தகைய அகங்காரத்தின் விளைவாக அது துன்பத்திற்கு ஆளாகிறது. கசாப்புக் கடைக்காரன் அக்கன்றுகுட்டியை வெட்டி அதன் தோலைப் பதனிடுகின்றுன். அந்தத் தோலினின்று பாதரட்சை அமைக்கப் பெறுகிறது. அதே தோலைக் கொண்டு மத்தளம் ஒன்று அமைக்கப்பெறுகிறது. மத்தளத்தை 'அடி அடி' என்று அடிக்கிருர்கள். பாதரட்சையாக இருக்கிறபொழுது அது மிதியுண்கிறது. மத்தளமாக இருக்கிறபொழுது அது அடியுண்கிறது. கடைசியாக அக்கன்றுகுட்டியின் நரம்பினின்று பஞ்சடைக்கும் வில் ஒன்று அமைக்கப்பெறுகிறது. அந்த வில்லைப் பயன்படுத்துகிற பொழுது அது 'துஹு துஹு' என்னும் ஓசையை உண்டுபண்ணுகிறது. 'நீ, நீ' என்பது அதன் பொருள். 'நான்' என்னும் அகங்காரம் அடிபட்டுப்போய் 'நீ' என்னும் தெய்விக உணர்வு தலையெடுக்கிற பொழுது துயரமும் ஒரு முடிவுக்கு வருகிறது. 'ஹம்பா ஹம்பா' என்கின்ற ஓசை 'துஹு துஹு' என்கின்ற ஓசையாக மாறுகிறது. 'இறைவா செயலனைத்துக்கும் கர்த்தா நீயே. நான் வெறும் கருவி. கையாளுபவனுக இருப்பவன் நீ. கையாளப்படும் யந்திரமாக இருப்பவன் நான். செயலனைத்துக்கும் இறைவா, நீயே அதிபதி. இப்படி எண்ணம் மாறியமைகின்றபொழுது அகங்காரம் அகலுகிறது. இறைவனிடம் அடைக்கலம் புகுதல் ஓங்குகிறது. இறைவனிடம் அடைக்கலம் புகும் வரையில் அல்லலுக்கு எல்லை இல்லை.

''மக்கள் பொதுவாக என்னைக் குருமகராஜ் என்றும், ஆசான் என்றும் பாபாஜி என்றும் அழைக்கிருர்கள். இம் மூன்று சொற்களும் முள் தைப்பது போன்று என்னைத் துன்புறுத்துகின்றன. நான் யாண்டும் அம்பிகையின் குழந்தை. பாபாஜி என்பது ஞானத் தந்தை. நான் எப்படி ஞானத் தந்தை ஆக முடியும்! கடவுள் ஒருவரே லோக குரு ஆகிருர். அவர் ஒருவரே உயிர்களனைத்துக்கும் ஆச்சாரியர் ஆகிருர். ஞானத்தந்தையாகவும் மேனிக்குத் தந்தையாகவும் இருப்பவர் கடவுள் ஒருவரே. அத்தகைய எல்லாம் வல்ல தெய்வத்தினிடத்து நான் வெறும் கருவியாக இருக்கிறேன். அவர் ஆட்டுவித்த பிரகாரம் வெறும் பொம்மையாக இருந்து நான் ஆடுகிறேன். அவர் பேசுவித்த பிரகாரம் நான் பேசுகிறேன். என்னைக் காணவருபவர்களுள்

யாராவது ஒருவன் என்னைக் குருதேவா என்றோ, குருமகராஜ் என்றோ, ஆச்சாரிய தேவா என்றோ அழைத்தால் நான் அதற்குப் பெரிதும் ஆட்சேபம் பண்ணுகிறேன். 'ஓ மடையா, இங்கிருந்து ஓடிப்போ. நான் ஆச்சாரிய தேவன் ஆவது எப்படி? சச்சிதானந்த சொருபமாகிய சிவ குருவுக்கு அன்னியமாக குருவாக வேறு யாருமில்லை. அடைக்கலம் புகுவதற்கு ஏற்றவர் பரம்பொருள் ஒருவரே. பிறவிப் பெருங்கடலைக் கடந்து முக்தியாம் கரை சேர்ப்பதற்குத் தகுதிவாய்ந்த மாலுமியா யிருப்பவர் கடவுள் ஒருவரே. (விஜயரைப் பார்த்து) ஆச்சாரிய ஸ்தானத்திலிருந்து அருள் துறையில் பணியாற்றுவது மிகக் கஷ்டம். நான் ஓர் ஆச்சாரியன் என்னும் எண்ணத்தை ஒருவன் பூணுவானாகில் அந்த எண்ணம் அவனுக்குப் பெருங்கேடு விளைவிக்கிறது. மக்களுள் பலபேர் வந்து அன்னவன் பாதத்தில் வீழ்ந்து வணங்குகின்றனர். அப்பொழுது அவன் பத்மாசனம் போட்டு நிமிர்ந்து உட்காருகிறான். செருக்குடன் அவன் தனக்குத் தானே 'நான் ஒரு மதபோதகன். மற்றவர்கள் எல்லாரும் என்னுடைய அறிவுரைக்குச் செவி சாய்க்கட்டும்!' என்று எண்ணிக்கொள்ளுகிறான். இத்தகைய மனப்பான்மை கேடுடையது. அப்படி எண்ணிக்கொள்ளுகிற மனிதனுக்குச் சிறிது அந்தஸ்து வந்து வாய்க்கிறது. அதற்குமேல் அவன் பெறுவதற்குஒன்றுமில்லை. முன்னேற்றம் ஏதுமடையாது அந்நிலையிலேயே அவன் நின்று விடுகிறான். பொது மக்களுடைய பேச்சு எவ்வளவு தூரம் பயன் படும் என்பதைச் சற்று எண்ணிப் பார்க்க வேண்டும். 'ஆ! திருவாளர் விஜயர் அவர்கள் மிக அற்புதமாக அறிவுரையாற்றியுள்ளார். அவர் பாண்டித்தியம்மிக வாய்க்கப்பெற்றவர்!' இத்தகைய முகஸ்துதியோடு அவர்களுடைய பேச்சு நின்றுவிடுகிறது. அத்தகைய பேச்சில் மயங்கிப்போகலாகாது. 'நான் ஒரு மத போதகன்' என்னும் எண்ணத்தை உள்ளத்தினுள் ஒருநாளும் வைக்கவேண்டாம். அன்னை பராசக்தியிடம் எப்பொழுதுமே நான் இயம்புவதாவது: 'ஓ தாயே என்னைக் கருவியாக வைத்துக்கொண்டு நீ ஆட்டுகின்றாய். நீ ஆட்டுவித்த பிரகாரம் நான் ஆடுகிறேன். எச் செயலைச் செய்யும்படி நீ தூண்டுகிறாயோ அச் செயலை உன்னிடத்துக் கருவியாக இருந்துகொண்டு நான் செய்கிறேன். நீ பேசுவித்த பிரகாரம் நான் பேசுகிறேன்' "

விஜயர் (பணிவுடன்): "கிருபை கூர்ந்து தாங்கள் எனக்கு அனுமதி தாருங்கள். தங்களுடைய அனுமதியைப் பெற்றபிறகே நான் மேடையின்மீது அமருவேன்."

பரமஹம்சதேவர் புன்னகை பூத்தவராக: "நான் சொல்வதற்கு என்ன இருக்கிறது? பரமனிடம் தாங்களே பிரார்த்தனை பண்ணிக் கொள்ளுங்கள். அவர் எல்லார்க்கும் சொந்தம். 'சந்தமாமா குழந்தைகள் எல்லார்க்கும் சொந்தமாயிருப்பதுபோன்று இறைவன் எல்லார்க்கும் சொந்தமாயிருக்கிறார். நல்ல மனப் பான்மை படைத்தவராக இருப்பீராகில் தாம் அஞ்சுவதற்கு ஒன்றுமில்லை."

விஜயர் தம்முடைய விண்ணப்பத்தை நிறுத்தி விடவில்லை. பரமஹம்சதேவரிடம் மேலும் பணிவுடன் தமக்கு அனுமதிதர வேண்டுமென்று விண்ணப்பித்தார். அப்பொழுது பரமஹம்சதேவர் பகர்ந்தார்: "ஆம் உம்முடைய சமாஜத்தினுடைய சட்டதிட்டங்களைப் பின்பற்றுவீராக. உள் உணர்வு நிறைந்த தெய்வ பக்தி ஒருவனிடத்தில் இருக்குமாகில் அவன் வாழ்க்கையில் அனைத்தும் நேர்மை பெற்றுவிடும்!"

விஜயர் மேடையின் மீதமர்ந்து பிரம்ம சமாஜத்து ஐதிகப்படி வழிபாட்டை நடாத்தி வைத்தார். உள்உணர்வோடு அவர் செய்த பிரார்த்தனை எல்லாருடைய உள்ளங்களிலும் ஊடுருவிப் பாய்வதாயிற்று. வழிபாடு முற்றுப் பெற்றனபிறகு திருவாளர் பெனிபால் பரமஹம்ச தேவருக்கும், குழுமியிருந்த பக்தர்களனைவருக்கும் அறுசுவை விருந்து படைத்தார்.

விருந்தோம்புதல் இனிது நிறைவேறிய பிறகு ஆங்குக் குழுமியிருந்தவர்கள் அவரவர் வீட்டுக்குச் செல்ல ஆயத்தமாயினர். பரமஹம்சதேவரும் தக்ஷிணேசுவர ஆலயத்துக்குப் புறப்படுவதற்கு முன்பு விஜயரிடம் அரிய கருத்துஒன்றை பகர்ந்தருளினார். பரம்பொருளை நீவிர் அன்னை பராசக்தியாகக் கருதி வழிபாடு செய்வீராக. அது உமக்குப் பெருநலம் விளைவிக்கும்.

---

# பராபரக் கண்ணி

( தாயுமானவர் இயற்றியது )

850. வாயாற் கிணறுகெட்ட
வாறேபோல் வாய்பேசிப்
பேயானர்க் கின்பமுண்டோ
பேசாய் பராபரமே.

அமைக்கப்பெறுகிற கிணறு ஒன்று எவ்வளவு அகன்றதோ அதற்கேற்றவாறு அதன் வாயும் அகன்றிருக்கிறது. வேறு எந்தப் போக்கிலும் அதை அமைப்பது மிகச் சிரமமானது. இன்னும் மேல் தரையானது மிருதுவாயிருக்குமானல் கிணற்றின் வாய் அதற்கேற்றவாறு படிப்படியாக அகன்றுகொண்டே போகும். அப்படி அதன் வாய் விரிவடைவதற்கேற்ப அக்கிணற்றுக்குப் பிரதிகூலம் ஒன்று உள்ளது. காற்று அடிக்கின்ற பொழுது குப்பை தூசி புழுதி முதலியவைகளைச் சிறிது சிறிதாக அது கொண்டு வந்து போடுகிறது. சிறுவர்கள் நாலாபக்கமும் நின்று கொண்டு கல், மண்ணுங்கட்டி முதலியவைகளைக் கிணற்றினுள் வீசிப் போடுகிறூர்கள். இச்செயல்களின் மூலமாக கிணற்று நீர் தூய்மையை இழந்து விடுவதுமல்லாது அக்கிணறு தானே சிறிது சிறிதாகத் தூர்ந்து போகிறது. கிணற்றின் வாய் முழுவதும் மூடப்பட்டதாக இருக்குமானல் இத்தகைய இடைஞ்சல்கள் வாய்க்க மாட்டா. ஆக, கிணறு கெடுவதற்கு அதன் வாயே காரணமாகிறது. கிணறு வாய் படைத்திருப்பது போன்று மனிதனும் வாய் படைத்திருக்கிறுன். தான் படைத்திருக்கிற வாயைச் சரியாகப் பயன்படுத்த மனிதன் கடமைப்பட்டிருக்கிறுன். இரண்டு காரியங்களுக்கு வாய் உதவுகிறது. உடலுக்குத் தேவையாயிருக்கிற உணவை ஏற்றுக் கொள்ளுவதற்கு அது உதவுகிறது. மக்களுக்கிடையில் தன் கருத்தை எடுத்து வழங்குவதற்கும் வாய் உதவுகிறது. உணவை அளந்தெடுத்துப் பொருத்தமான வேளைகளிலேயே உன்பவன் உத்தமமான மனிதனுகிறன். உணவு அகப்படுகிற வேளைகளில் எல்லாம் அளவுகடந்து அதைப்புசித்துத் தன் உடல் வாழ்வைப் பாழ்படுத்துபவன் அதமன் ஆகிறுன். இனி, பேச்சைப் பற்றிய நியதி அதைவிடக் கடினமானது. எதைப் பேசுவது, யாரிடம் பேசுவது, எவ்வளவு பேசுவது ஆகிய நியதிகள் மிக முக்கியமானவைகள். தனக்குத் தெரிந்திருப்பவைகளை யெல்லாம் ஓயாது உளறிக் கொட்டிக் கொண்டிருப்பவன் பண்பட்டவன் ஆகான். சொல்வேந்தன் என்றும், நாவுக்கு அரசன் என்றும் அப்பர் சுவாமிகள் இயம்பப் பெறுகிறுர். அவருடைய ஆணைக்கு உட்பட்டு அவருடைய நாவானது கடவுளைப் பற்றியே அளந்தெடுத்துப் பேசும். அப்படிப் பேசுதற்கு அவசியம் அமையாத விடத்து அவருடைய நாவானது அடங்கி ஒடுங்கி இருக்கும். நன்மக்கள் எல்லாரும் அவருடைய பாங்கில் வாயடங்கியிருக்கக் கடமைப்பட்டிருக்கின்றனர். ஆனல் மக்களில் பெரும்பான்மையோருக்கு அது சாத்தியம் அன்று. பொருந்தியவைகளையும், பொருந்தாதவைகளையும், அவர்கள் உளறிக் கொட்டிக் கொண்டேயிருப்பார்கள். யாரிடம் பேசுகிறோம் என்பதையும் அவர்கள் கருத்தில் வாங்கிக் கொள்வதில்லை. எந்தச் சந்தர்ப்பத்தில் பேசுகிறோம் என்பதையும் அவர்கள் எண்ணிப் பார்ப்பதில்லை. அகன்ற வாய் படைத்துக் கிணறு கெட்டுப்போனது பெரிய கேடாகாது. கட்டிலடங்காது வாய்படைத்துக் கெட்டுப் போன மக்களே பெருங்கேடர் ஆகின்றனர். அன்னவர்களைத்தாம் பேய் என்று பகர வேண்டும். கட்புலனுகாத பேய்களைப் பற்றி மக்கள் ஏராளமாகக் கற்பனை பண்ணிக்கொண்டிருக்கின்றனர். அத்தகைய பேயைக் கண் கொண்டு கண்டவர்கள் யாருமில்லை. வாயடங்கப்பெருத வாயாடிகளே கட்புலனுகின்ற பேயாகின்றனர். அவர்கள் தங்களுக்குத் தாங்களே தீங்கு செய்து கொள்கின்றனர். பிறர்க்கும் அவர்கள் ஓயாது இன்னலை விளைவித்துக் கொண்டிருக்கின்றனர். அத்தகைய வீண் பேச்சாளர்க்கும் பேரின்பத்திற்கும் வெகு தூரம். நிறைகுடம் ததும்புவதில்லை. அங்ஙனம் அறிவில் சிறந்தவர்கள் அமைதியுற்றிருக்கின்றனர். பேரின்பத்தை ஓரளவு அன்னவர்கள் யூகிக்கின்றனர். ஆனல் பொருள்படாப் பேச்சில் புதைந்து கிடப்பவர்களுக்கும் பேரின்பத்திற்

கும் வெகுதூரம் என்பது இக்கண்ணியின் கருத்து. வாயடங்கப் பெறுவதற்கேற்ப மானுடன் நல்ல ஆத்ம சாதகனுகிருன்.

351. பாவமென்ருல் ஏதும்
பயமின்றிச் செய்யஇந்தச்
சீவனுக்கார் போதந்
தெரித்தார் பராபரமே.

பாபம்–தீச்செயல்; பயம்–அச்சம் ; சீவன்–பிரபஞ்சத்தில் கட்டுண்டு கிடக்கும் ஜீவாத்மன் ; போதம்-நல்லறிவு;தெரித்தல்-ஊட்டுதல்.

இறைவனுடைய அமைப்பிலே மூன்று பகுதிகள் இருக்கின்றன. அவை முறையே ஜகத், ஜீவன், பரம் என இயம்பப் பெறுகின்றன. பாசம், பசு, பதி எனவும் அந்த மூன்று கூறுகள் பெயர் பெற்றுள்ளன. பசுவானது பிரபஞ்சத்தில் கட்டுண்டு கிடக்கிறபொழுது அது ஜீவாத்மன் எனப்படுகிறது. கட்டுகிற பாங்கு பிரபஞ்சத்துக்கு இருப்பதால் அது பாசம் எனப்படுகிறது. இவை இரண்டையும் கடந்திருப்பது பதி அல்லது பரம். பரிபாகத்தில் ஜீவாத்மாக்கள் பலதரப்பட்டவர்களாக இருக்கிருர்கள். பரமனுக்குப் பக்கத்தில் வந்துள்ள பரிபாகம் அடையப் பெற்ற பெருமக்கள் இருக்கிருர்கள். பிரபஞ்சத்திலேயே ஊறிக் கிடந்து அதில் திருப்தியடையும் கடைத்தரமான மக்களும் இருக்கிருர்கள். மக்களை மேல் நிலைக்குக்கொண்டுவரும் செயல்கள்புண்ணியம் எனப்படுகின்றன. அவர்களைக் கீழ்மையில் ஆழ்த்தும்செயல்கள் பாபம் எனப்படுகின்றன. பாபத்துக்கு அஞ்சுவது நல்லார்களுடைய பாங்கு. பாபத்தில் துணிந்து மூழ்குவது பொல்லார்களுடைய பாங்கு. பயத்தை வெல்ல மனிதன் கடமைப்பட்டிருக்கிருன்.

பயம் உருவெடுப்பது அக்ஞானத்தினின்றேயாம். கடவுளை அணுக அணுக மனிதன் நிர்ப்பயம் அல்லது அபயம் என்னும் மேலாம் பாங்கைப் பெறுகிருன். எதற்கும் பயப்படாது இருந்து பழகுதல் நல்ல பயிற்சி ஆகும். ஏனென்ருல் பயம் ஒவ்வொன்றிற்கும் பிறப்பிடம் அக்ஞானம். ஆனல் கொடிய செயலில் ஈடுபடுவதற்கு மனிதன் பயப்படவேண்டும். அத்தகைய பயம் அக்ஞானத்தை அடிப்படையாகக் கொண்டதன்று. நல்லறிவை அடிப்படையாகக் கொண்டதாக அது இருக்கிறது. ஆனல் புல்லிய பாங்குடைய ஜீவாத்மாக்கள் பாபம் செய்வதில் பயம்கொள்ளுவதில்லை. ஒருவிதத்தில் அவர்கள் ஒட்டகத்திற்கு ஒப்பானவர்கள். முள்செடியைத் தின்பதில் ஒட்டகத்திற்கு விருப்பமதிகம். செடியிலுள்ள முள் ஒட்டகத்தின் உதட்டைக்குத்தி ரத்தம் சொட்டச் செய்யும். அப்படியிருந்தும் முள் செடியைத் தின்னும் தீய பழக்கத்தினின்று ஒட்டகம் பின் வாங்குவதில்லை. பெரும்பாவிகள் அங்ஙனம் எந்தப் பாபத்திற்கும் அஞ்சாது புன்செயலிலேயே ஈடுபடுகின்றனர். ஜீவாத்மாக்களுள் அவர்கள் கடைத்தரமானவர்கள். மக்களுள் யாருமே இத்தகைய கீழ்மையில் இறங்கலாகாது. புண்ணியத்தையே கடைப்பிடித்து அவர்கள் மேல் நிலைக்கு வரவேண்டும் என்பது இக்கண்ணியின் கருத்தாகும்.

352. இன்ப நிருவிகற்பம்
இன்றேதா அன்றெனிலோ
துன்பம் பொறுப்பரிது
சொன்னேன் பராபரமே.

அன்று—இல்லை;

மனிதன் படுகிற இன்ப துன்பங்களுக்கு மனதே காரணமாகிறது. மனது விருத்தி சொருபமானது. நல்ல விருத்தி இன்பத்துக்கு ஏதுவாகிறது. கெட்ட விருத்தி மனிதனைத் துன்பத்தில் ஆழ்த்துகிறது. இச்சையினல் தூண்டப்பட்டு உதித்து வருகிற மனேவிருத்திகளைச் சங்கல்பம் என்கிருேம். இச்சையினல் தூண்டப்பெருது விருத்திகள் தாமாகத் தோன்றி வருமானல் அவைகள் விகல்பங்கள் எனப் பகரப்பெறுகின்றன. விகல்பங்களுக்கு முதல் காரணம் சங்கல்பம். சங்கல்பம் அதிகரிப்பதற்கேற்ப விகல்பமும் ஓயாது உதித்துக் கொண்டேயிருக்கும். ஆசையற்றவிடத்துச் சங்கல்பம் உண்டாவதில்லை. சங்கல்பம் ஒய்ந்து போனவிடத்து விகல்பமும் தானுக அடிபட்டுப்போகிறது. விகல்பங்கள் யாவும் மறைந்து பட்டுப் போனவிடத்துச் சுத்த மனது எஞ்சியிருக்கிறது. அந்நிலையில் ஆத்மாவுக்குச் சொந்தமாயுள்ள ஆனந்தம் தானுகத் திகழுகிறது. மனம் ஓய்ந்து இன்புற்று இருப்பதே மனிதனுடைய நிஜநிலை என்னும் கோட்பாடு இக்கண்ணியில் அடங்கியிருக்கிறது.

# பரபோதம்

(ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருட்செல்வரான சுவாமி பிரம்மானந்தரின் போதனை)

மனம் அலையும் தன்மை உடையது. அடிக்கடி மனம் மாறி அமைந்து கொண்டேயிருக்கும். முக்குணங்களுள் எந்தக் குணம் ஆதிக்கம் செலுத்துகிறதோ அந்தக் குணத்துக்கு ஏற்ப மனம் வேலை செய்யும். சத்துவகுணம் ஆதிக்கம் செலுத்தும்பொழுது மனம் அமைதியுற்றிருக்கும். அப்பொழுது தியானம் செய்தால் தியானம் நன்கு கைகூடும். ரஜோ குணம் ஆதிக்கம் செலுத்தும்பொழுது மனம் காமத்துக்கு வசப்பட்டு அலைந்துதிரியும். அப்பொழுது தியானத்தில் அமர்ந்தால் தியானம் கைகூடாது. தமோகுணம் ஆதிக்கம் செலுத்தும்பொழுது மனம் துயரத்துக்கு ஆளாகும். அப்பொழுது மனம் எவ்விதச்செயலிலும் ஊக்கமாக ஈடுபடாது. முக்குணங்களுக்கும் மனம் வசப்பட்டதாக இருக்கிறது. அப்பியாசத்தின் மூலமாக நீ சத்துவகுணத்தை வளர்ப்பாயானால் மனம் சதா அமைதியுற்றிருக்கும். கடலில் அலை எழுவதும் தாழ்வதும் மாறி மாறி நிகழ்வது போன்று மனதிலும் உயர்வும் தாழ்வும் மாறிமாறி வந்துகொண்டிருக்கும். எனவே தியானம் சில சமயம் சிறந்த முறையில் அமையும். இன்னும் சில சமயம் தியானமே கைகூடாது. இந்த மாறுதல்களெல்லாம் ஆரம்ப நிலையிலுள்ள சாதகர்களுக்கேயாம். இம் மாறுதல்களைக் குறித்து நீ கவலைப்பட வேண்டாம். இடைவிடாது சாதனை செய்வதில் ஊக்கத்தோடு தொடர்ந்து முயன்று வர வேண்டும். நீண்டநாளைக்கு நாள்தோறும் முறையாக அப்பியாசம் செய்து வருவாயானால் மனம் தாழ்ந்த நிலைக்குப் போவது குறைந்து கொண்டே வரும். மனம் கடவுளை நோக்கிச் செல்பவனுக்கு ஆரம்பத்தில் ஏற்பட்ட தடைகளெல்லாம் அகன்றுகொண்டே வரும்.

சத்துவ குணம் உன்னிடத்தில் ஆதிக்கம் செலுத்தும்பொழுது மனது உயர்ந்த நிலையில் சாந்தமாக இருக்கும். அப்பொழுது நீ மற்ற வேலைகளை ஒதுக்கி வைத்துவிட்டு ஜபம் தியானத்தில் ஆழ்ந்து ஈடுபடவேண்டும்.

புனித ஸ்தலங்களுக்கு யாத்திரை செல்வது மனபரிபாகத்துக்குத் துணைபுரிகிறது. ஒவ்வொரு ஆலயத்திலும் அருள் ஓங்கியிருக்கின்ற காலம் உண்டு. அந்தச் சமயத்தில் சாதகன் அவ்வாலயத்துக்குச் சென்று தியானம் செய்வானாகில் அந்த அருளுணர்வோடு சாதகனுடைய மனமும் கலந்து பேரானந்தம் அடையும். நீ ஆலயங்களுக்குச் சென்று அருட்சக்தி ஓங்கியிருக்கும் வேளையில் தியானம் செய்து பழகு. எந்த ஆலயத்தில் எப்பொழுது அருள் நிலை ஓங்கி இருக்கிறது என்பதை அறிந்து கொள்வதில் சிரமம் இல்லை. தியானப் பயிற்சி பெற்றுவருகின்ற மனிதன் அச்சூழ்நிலையைச் சுலபத்தில் அறிந்துகொள்ளலாம். காசி அருள் க்ஷேத்திரமாகிறது. இவ்வுலக நிலையைக் கடந்து அது மிக உன்னத நிலையில் இருக்கிறது. காசியில் அருளுணர்வு திரண்டு இருக்கிறது. நீ அங்குச் சில காலம் வசித்திருக்க வேண்டும். காசியில் தங்கி சாதனை செய்வாயானால் நீ செய்யும் சாதனைக்கு விரைவில் பலன் கிடைப்பதை அறிவாய். நீ உச்சரித்து வருகிற மந்திர சக்தியின் பொருள் உனக்கு மிகவிரைவில் விளங்கவேண்டுமானால் காசியிலிருந்து நீ சாதனை பழகவேண்டும். அகில அண்டத்துக்கும் நாயகனான விசுவநாதன் காசி மக்கள் அனைவருக்கும் முக்தி தருகின்றார். காசி அவ்வளவு மகத்துவம் வாய்ந்தது.

ஆத்ம சிந்தனை செய்து பழகுவதை ஆத்ம சாதனம் என்கின்றோம். ஆத்ம சிந்தனை செய்வதற்கு ஜபம் தியானம் பழகவேண்டும். காலையில் ஒரு தடவை மாலையில் ஒரு தடவை ஆக இருமுறை நாள்தோறும் ஜபம் தியானம் செய்து பழகவேண்டும். இரண்டு ஆண்டுகள் தொடர்ந்து இப்பயிற்சியை நீ பயின்று வருவாயானால் ஜபம் தியானம் செய்வதில் உனக்கு ஆனந்தம் கிடைப்பதை அறிவாய். உன் உள்ளத்தில் ஆத்மீக உணர்ச்சி தானாக எழும். அப்பொழுது உலகக் காட்சியும் மாறி அமையும். சிறிதளவாவது பயிற்சி பெறாது நீ முன்னேற்றம் அடைவது எப்படி? குறைந்தது இரண்டு ஆண்டுகளாவது சாதனையில் ஆழ்ந்து ஈடுபட்டால்தான் நீ ஏதாவது பலன்பெற முடியும். சாதனையை விடாது செய்துவரவேண்டும்.

தியானம் செய்வதில் உனக்கு ஆனந்தம் கிடைத்து விடுமானல் நீ ஒருநாளும் தியானம் செய்வதை நிறுத்தமாட்டாய். தியானத்தில் அமரும்பொழுது சரீரத்தை நேராக நிமிர்ந்து இருக்கும்படி செய்யவேண்டும். சிரம், கழுத்து, நெஞ்சு ஆகிய மூன்று பகுதிகளும் நேர்கோட்டில் அமையும்படி நிமிர்ந்து அமரவேண்டும்.

தியானத்துக்குப் போவதற்கு முன்பு ஆத்மீக நூல்களை ஆழ்ந்து படிக்கவேண்டும். தியானத்தில் அமர்ந்தவுடன் நீ தியானம் செய்யத் தொடங்கிவிடாதே. நீ எந்தத் தெய்வத்தைக் குறித்துத் தியானம் செய்கின்ருயோ அதற்கு அந்நியமாக இருக்கின்ற எண்ணங்களையெல்லாம் உன் மனதிலிருந்து அகற்றி மனதைக் காலியாக்கு. ஆரம்பத்தில் சில நாட்களுக்கு மனப்போராட்டம் பெரியதாக இருக்கும். மனதைக் காலி செய்வது அவ்வளவு சுலபமன்று. ஆனாலும் தொடர்ந்து சாதனை செய்தால் நீ வெற்றியடையலாம். ஆரம்பத்தில் மனதோடு போராடுவது மிகப்பெரிய கஷ்டமாக இருக்கலாம். பயிற்சியின் விளைவாக மனம் உன் வசத்துக்கு வந்துவிட்டால் மனத்தை அடக்குவது எளிதாகிவிடும்.

பற்றற்றுக் கருமம் செய்வாயானல் உனக்கு நன்கு தியானம் கூடும். தியானம் நாள்தோறும் செய்து வரவேண்டும். நீ அதிகமான வேலை செய்ய வேண்டியிருந்தால் உன் தியான நேரத்தைக் குறைத்துக்கொள்ளலாம். எவ்வளவு வேலை இருந்தாலும் சிறிது நேரமாவது தினமும் தியானம் செய்யவேண்டும். தியான நேரத்தை நாளுக்கு நாள் அதிகரித்து வரவேண்டும். தவிர்க்க முடியாத சில சந்தர்ப்பங்களில் தியான நேரத்தைக் குறைக்கலாமேயொழிய மற்ற நாட்களில் தியான நேரத்தை அதிகரித்துக்கொண்டே வரவேண்டும்.

தியானத்தில் அமர்வதற்கு முன்பு கைகளையும் முகத்தையும் கழுவி சுத்தமாக்கிக்கொள்ள வேண்டும். சத்தியமும் பிரமச்சரியமும் நீ அனுசரிக்க வேண்டிய முக்கியமான விதிகளாகும். சத்தியத்தையும் பிரமச்சரியத்தையும் நீ கடைப்பிடிப்பாயானல் மற்ற நல்லியல்புகளை நீ மேற்கொள்வது சுலபம். நாவை அடக்குவதும் காமத்தை அடக்குவதும்தான் கஷ்டமானவை. அவ்விரண்டையும் நீ அடக்கிவிடுவாயானல் ஒழுக்கத்தில் நிலைநிற்பது உனக்கு எளிது.

தெய்வத்தைப் பற்றிய சிந்தனையிலும், தெய்வத்தைப் பற்றிய பேச்சிலும், தெய்வப் பணிவிடையிலும் உன் வாழ்நாள் கழிந்துகொண்டு வரட்டும். கடவுள் நம்பிக்கை உன் உள்ளத்தில் ஆழ்ந்து இடம் பெறட்டும். உனக்குத் தாய் தந்தையர்கள் இருப்பது எவ்வளவு உண்மையோ கடவுள் இருப்பதும் அவ்வளவு உண்மை ஆகும். உன் தாய் தந்தையர்களை விடக் கடவுள் உன்னை நன்கு கண்காணித்து வருகின்ருர். கடவுளை நம்புகின்ற அளவு உன் வாழ்க்கையில் உனக்கு வருகின்ற இடையூறுகள் அகன்றுவிடுகின்றன. கடவுள் ஒருவர் இருக்கிருர் என்பதில் நீ சிறிதும் ஐயம் கொள்ள வேண்டியதில்லை. உலகம் இருப்பதையும், உலகத்தோடு தொடர்பு வைத்திருப்பதையும் நீ உண்மையாக நம்புகின்ருய். உன் மனம் தூயதாகும்பொழுது கடவுள் இருப்பதையும், கடவுளோடு இணக்கம் வைப்பதையும் நீ உண்மை என்று உணர்வாய். கடவுள் இருக்கிருர் என்பதை நிச்சயமாக நம்பி நீ செயல்புரிந்து வா. யாவும் மங்கலமாக முடியும்.

தியானத்தில் படித்தரங்கள் இருக்கின்றன. முதலில் ஐம்பொறிகள் வழியே புறத்தே சென்று கொண்டிருக்கும் மனதை உள்ளே இழுத்துப் பழகவேண்டும். ஐம்பொறிகள் வாயிலாகச் சிதறுண்டு போகும் மனதை ஒன்று சேர்த்து உள்ளே இழுப்பதற்குப் பிரத்யாகாரம் என்று பெயர். இது தியானத்தின் முதற்படியாகும். உள்ளே இழுத்து ஒன்று சேர்க்கப்பட்ட மனதை ஒன்றினிடத்துச் செலுத்த வேண்டும். அதற்குத் தாரணை என்று பெயர். இது தியானத்தின் இரண்டாவது படியாகும். ஒன்றினிடத்துக் குவிக்கப்பட்ட மனதை அதிலேயே நிலைத்திருக்கும்படி செய்ய வேண்டும். அதற்குத்தான் தியானம் என்று பெயர். மனம் சிதறுண்டுபோகாது ஒருமுகப்பட்டு ஒன்றினிடத்து நிலையாக இருக்கும் பொழுதுதான் நீ தியானம் செய்தவனுகின்ருய். தியானம் ஆழ்ந்ததாக ஆனல் சமாதி கைகூடுகிறது. எந்தப்பொருளைக் குறித்து நாம் தியானம் செய்கின்ரேமோ அந்தப்பொருள் மயமாய் நாம் மாறி அமைவது சமாதியாகும்.

# தாரணை அல்லது மன ஒருமுகப்பாடு

(சுவாமி விவேகானந்தர் 1900 ஆம் ஆண்டில் ஸான்பிரான்ஸிஸ்கோவிலுள்ள வாஷிங்டன் மண்டபத்தில் நிகழ்த்திய சொற்பொழிவு)

புற உலகைப் பற்றியும் அக உலகைப்பற்றியும் நாம் பெற்றுள்ள ஞானம் முழுவதும் 'மன ஒருமுகப்பாடு' என்னும் உபாயத்தின் மூலம் கிடைத்ததாகும். ஞானம் பெறுவதற்கு மன ஒருமுகப்பாடு ஒன்றே உற்ற உபாயமாகிறது. புறப்பொருளைப்பற்றிப் பெற்றுள்ள விஞ்ஞான அறிவுக்கு மன ஒருமுகப்பாடு மூலகாரண மாகும். மன ஒருமுகப்பாட்டின் மூலமாக வன்றி எந்தப் பொருளைப் பற்றிய அறிவையும் பெற முடியாது. வானிலுள்ள கோள்களைப் பற்றிய அறிவைப் பெறுவதற்கு வான சாஸ்திரி பூதக்கண்ணாடி மூலம் தம் மனதை வானிலுள்ள கோள்களின் மீது ஒருமுகப் படுத்துகிறார். அதே போன்றுதான் மற்ற எல்லாத் துறைகளிலும் மன ஒருமுகப்பாட்டின் மூலம் ஞானத்தைப் பெறுகிறோம். உங்களுடைய மனதைப் பற்றி நீங்கள் அறிந்துகொள்ள விரும்புவீர்களானால் அதற்கும் மன ஒருமுகப் பாடு என்னும் முறைதான் பயன்படுகிறது. உங்கள் மனதை ஒருமுகப்படுத்தி அவ்வொரு முகப்பாட்டை மனத்தின் மீதே செலுத்த வேண்டும். உலகத்தில் ஒரு மனதுக்கும் மற்றொரு மனதுக்குமுள்ள வேறுபாடு மன ஒரு முகப்பாட்டைப் பொறுத்திருக்கிறது. ஒரு விஷயத்தில் ஒரு மனது மற்ற மனதைவிட ஆழ்ந்து ஒருமுகப்படுமாயின் அவ்விஷயத்தைப்பற்றிய அறிவு ஆழ்ந்து ஒருமுகப்பட்ட மனதுக்குக் கிடைக்கிறது.

பண்டைக்காலத்தில் வாழ்ந்த சான்றோர்களின் வாழ்க்கையையும் இக்காலத்தில் வாழும் சான்றோர்களின் வாழ்க்கையையும் ஆராய்ந்து பார்த்தால் அவர்களின் பெருமைக்கு உயர்ந்த லட்சியத்தின் மீது அவர்களுக்கு இருந்த மன ஒருமுகப்பாடே காரண மாகும் என்பது விளங்கும். பேரறிவாளர்கள் என்று நீங்கள் அவர்களைப் பகரலாம். முயன்றால் நாமும் பேரறிவாளர்கள் ஆகலாம் என்று யோக சாஸ்திரம் பகர்கிறது. சிலர் அபார சக்தியுடன் இவ்வுலகுக்கு வந்து அரும்பெரும் காரியங்களை இளமையிலேயே சாதித்திருக்கிறார்கள். நாமும் அரும்பெரும் காரியத்தைச் சாதிக்க முடியும். அவர்களுக்கிருந்த அபார சக்தி நம்மில் ஒவ்வொருவரிடமும் இருக்கிறது. மனதைப் பற்றிய உண்மையை அறிந்துகொள்வதற்கு மனதை ஒருமுகப்படுத்துவது எவ்வாறு என்பதை ஆராய்வோம். யோகிகள் சில விதிகளை வகுத்திருக்கிறார்கள். அவ்விதிகளில் சிலவற்றைப் பற்றி நான் இப்பொழுது உங்களுக்கு எடுத்துச் சொல்லப் போகிறேன்.

பல முறைகளிலிருந்து மன ஒருமுகப்பாடு வருகிறது. புலன்களின் மூலம் மன ஒருமுகப்பாடு உண்டாகிறது. நல்ல சங்கீதத்தைக் கேட்கும்பொழுது சிலருக்கு மன ஒருமுகப்பாடு உண்டாகிறது. அழகான காட்சியைக் காணும் பொழுது இன்னும் சிலருக்கு மன ஒருமுகப் பாடு உண்டாகிறது.

கூரான இரும்பு ஆணிகளின் மீது படுத்திருந்து சிலர் மன ஒருமுகப்பாட்டைப் பெறுகின்றனர். கூரிய கூழாங்கற்களின்மீது அமர்ந்து இன்னும் சிலர் மன ஒருமுகப்பாட்டைப் பெறுகின்றனர். இவைகளெல்லாம் அசாதாரணமான முறைகளாகும். இவைகள் விஞ்ஞான ரீதிப்படி அமைந்தவைகள் அல்ல. மனதைப் படிப்படியாகப் பண்படுத்துகின்ற பயிற்சியே மன ஒருமுகப்பாட்டுக்கு விஞ்ஞான ரீதியில் பெறுகின்ற பயிற்சியாகும். ஒருவர் கையைத் தூக்கிவைத்துக்கொண்டிருப்பதின் மூலம் மன ஒருமுகப்பாட்டைப்பெறுகின்றார். தம்மைத் துன்புறுத்தி மன ஒருமுகப்பாட்டைப் பெறுவதற்கு அவர் விரும்புகிறார். இதுவும் அசாதாரண முறையே.

மன ஒருமுகப்பாட்டுக்குப் பொது வழிகள் இருக்கின்றன. தத்துவ ஞானிகள் அப்பொதுவழிகளைப் பகர்ந்திருக்கின்றனர். மனதைத் துரிய நிலைக்கு எடுத்துச் செல்வதன் மூலம் மன ஒரு முகப்பாட்டைப் பெறலாமென்று சில தத்துவஞானிகள் பகர்கின்றனர். இந்த உடல் நமக்கு ஏற்படுத்தியுள்ள கட்டுப்பாடுகளையெல்லாம் கடந்து செல்வதே துரிய

நிலை எனப்படும். ஒழுக்கத்தினால் மனத் தூய்மை என்னும் விழுப்பத்தைப் பெறலாம் என்று யோகி கருதுகின்றான். மனம் தூய்மையாகின்ற அளவு அதை அடக்குவது எளிதாகின்றது. மனதில் எழுகின்ற ஒவ்வொரு எண்ணத்தையும் மனம் பற்றிக்கொள்கிறது. பிறகு அந்த எண்ணப்படி வேலை செய்கிறது. எண்ணம் செயலாக வடிவெடுத்த பிறகு அதை அடக்குவது கஷ்டம். எண்ணமாகத் தோன்றும் ஆரம்ப நிலையிலேயே அதை அடக்கிவிடவேண்டும். ஒழுக்கமில்லாத மனிதன் மனோதத்துவத்தைக் கற்பதற்கு மனதை ஒருமுகப்படுத்த முடியாது. ஆரம்பத்தில் அவன் சிறிதளவு மனதை அடக்கும் பயிற்சியைப் பெறலாம். மனோதத்துவத்தைப் பற்றிச் சிறிதளவு கேட்கவும் செய்வான். ஆனால் அந்தச் சக்தியும் சிறிது காலத்தில் அவனை விட்டுப் போய்விடும். சிலரிடத்தில் மனோசக்தி இருப்பதைக் காண்கின்றோம். ஆனால் அது முறையான பயிற்சியின் ரீதியில் வந்ததன்று என்பது அவர்களுடைய வாழ்க்கையை நாம் துருவி ஆராய்ந்தால் விளங்கும். பாம்பாட்டி மந்திர சக்தியினால் பாம்புகளை அடக்குகின்றான். ஆனால் அவன் பாம்பு கடித்தே மடிந்துபோகின்றான். அசாதாரண முறையில் மனோ சக்தி பெற்றவர்களை அந்த அசாதாரண சக்தியே அழித்துவிடுகிறது. எத்தனையோ விதங்களில் அசாதாரண சக்தியைப்பெறும் மனிதர்கள் லட்சக் கணக்கில் இந்தியாவில் இருக்கின்றார்கள். அவர்களில் பெரும்பாலோர் பைத்தியம் பிடித்தவர்களாக அலைந்து திரிந்து மடிகின்றனர். அவர்களுடைய மனம் சமநிலையை இழந்துவிடுவதால் பலர் தற்கொலையும் செய்து கொள்கின்றார்கள்.

ஆகையால் மன ஒருமுகப்பாட்டை விஞ்ஞான ரீதியில் அமைதியான முறையில் பாதுகாப்பான வழியில் நிதானமாகப் பெறவேண்டும். ஒழுக்கம் மன ஒருமுகப்பாடு பெறுவதற்கு முதல் நிபந்தனையாகும். ஒழுக்கமுள்ள மனிதன் தெய்வக்காட்சி பெற விரும்புவானாகில் தெய்வம் மானுட வடிவெடுத்து வந்து அவனுக்குத் தம்மை விளக்கிக் காட்டுகின்றார். மன நூல்களும், தத்துவ நூல்களும் பூரண ஒழுக்கத்தைக் கடைப்பிடிக்க வேண்டும் என்றுதான் வலியுறுத்துகின்றன. ஒழுக்கம் என்றால் என்ன என்பதைச் சிந்தித்துப் பாருங்கள். அஹிம்சை, தூய்மை, தவம் இவையே ஒழுக்கம் எனப்படுகின்றன. இவை ஒரு மனிதனுக்கு மிக அவசியமானவை. இவற்றைப் பூரண நிலையில் ஒரு மனிதன் பெற்றுவிடுகிறான் என்றால் அவனுக்கு வேறு என்ன வேண்டியிருக்கிறது! எந்த உயிர்ப் பிராணியிடமும் வெறுப்புணர்ச்சி இல்லாது ஒரு மனிதன் இருப்பானாகில் அவனிடம் எல்லா உயிர்களும் வெறுப்புக் கொள்ளா. தர்ம சிந்தனை இல்லாத மனிதன் தர்ம சிந்தனை உடையவனாகக் காட்டிக்கொள்ள முடியாது.

நான் சொல்லுவதை நீங்கள் நம்புங்கள். பாம்புகளும், தவளைகளும் வாழ்ந்த ஒரு குகையில் சான்றோர் ஒருவர் வாழ்ந்திருந்ததை நான் பார்த்திருக்கிறேன். சில சமயம் அவர் நாட்கணக்காகவும் இன்னும் சில சமயம் மாதக் கணக்காகவும் உணவருந்தாமலிருந்தார். அவர் மௌனமாக இருந்தார். ஒருநாள் ஒரு திருடன் அவர் ஆசிரமத்துக்கு வந்து திருந்தி அமைந்தான்.

“இதயம் என்னும் தாமரை மலரும் போது மக்கள் என்னும் தேனீக்கள் தாங்களாகவே அதை நாடி வருவார்கள்.” இங்ஙனம் எனது குருநாதர் பகர்வதுண்டு. இதயம் மலர்ந்த மக்கள் இன்றும் இருக்கின்றார்கள். அவர்கள் பேச வேண்டிய அவசியமில்லை. ஒரு மனிதன் தன்னுடைய உள்ளத்தில் பகைமை உணர்ச்சியை அகற்றி விடுகிறபொழுது அவன் முன்னிலையில் வரும் விலங்குகள் யாவும் பகைமை உணர்ச்சியை இழந்து விடுகின்றன. அங்ஙனமே மனத்தூய்மை உடையவர்களிடம் வருகின்றவர்கள் மனத்தூய்மை பெறுகின்றார்கள். இப்பண்புகள் நம்முடைய சகோதர மக்களிடையே பழகுகின்றபொழுது நமக்கு அவசியமானவையாகின்றன. நாம் எல்லாரையும் நேசிக்கவேண்டும். பிறரிடம் குறை காண்பதற்கு நமக்கு உரிமை இல்லை. அப்படிக் குறை காண்பதில் எவ்வித நலனுமில்லை. நாம் பிறருடைய குறைகளைப்பற்றி நினைக்கக்கூடாது. நல்லவற்றையே நாம் நினைக்கவேண்டும். பிறரைத் திருத்துவதற்காக நாம் இங்கு வரவில்லை. நம்மை நல்லவர்களாக ஆக்கிக் கொள்ளவே இங்கு வந்துள்ளோம்.

இங்கே குமாரி ......... என்பவர் வருகிறார். "நான் யோகியாகப் போகிறேன்" என்று அவர் பகர்கிறார். அவர் இச்செய்தியை இருபது முறை சொல்லியிருப்பார். ஐம்பது நாட்கள் தியானம் செய்கிறார். அதன் பிறகு அவர் பகர்வதாவது: "சமயத்தில் ஒன்றுமே இல்லை. நான் சமயத்தை அனுஷ்டானம் செய்து பார்த்திருக்கிறேன். அதில் ஒன்றுமில்லை என்பதை நான் காண்கிறேன்." இங்ஙனம் சில நாட்கள் பேசுவதும் சிறிது அனுஷ்டானம் செய்வதும் சமயத்தின் அடிப்படையாகா. சமயத்தின் அடிப்படை பூரண ஒழுக்கத்தில் அமைந்திருக்கிறது. பரிபூரண ஒழுக்கத்தைக் கடைப்பிடிப்பது மிகவும் கஷ்டமானதாகும். ஆனால் ஒழுக்கத்தைக் கடைப்பிடிக்காது சமயத்துறையில் முன்னேற்றமடைய முடியாது.

எங்கள் நாட்டில் மாமிச உணவு உண்ணாத மக்களிருக்கின்றார்கள். அவர்கள் நாள்தோறும் ஒரு ராத்தல் எடையுள்ள சர்க்கரையை எறும்புகளுக்காகப் பூமியில் தூவுவார்கள். இதைப்பற்றி ஒரு கதை உண்டு. ஒரு மனிதன் எறும்புகளுக்காகத் தரையின்மீது கொஞ்சம் சர்க்கரையை வைத்திருந்தான். மற்றொரு மனிதன் தெரியாமல் சர்க்கரையைத் தின்று கொண்டிருந்த எறும்புகளின் மீது காலை வைத்து விட்டான். உடனே சர்க்கரையை வைத்தவன், "கேடுகெட்டவனே! உயிர்களைக் கொன்று விட்டாயே" என்று கூறி அவனை உயிர்போகும் வண்ணம் நையப்புடைத்து விட்டான். இப்படி இருக்கின்ற மக்கள் இருக்கிறார்கள்.

புறத்தில் தூய்மையைக் காட்டிக்கொள்வது மிகவும் எளிது. அதை நோக்கித்தான் உலகம் முழுவதும் ஓடுகிறது. ஒருவிதமான உடையை அணிந்துகொள்வதுதான் ஒழுக்கம் என்றால் எந்த முட்டாளும் அதைச் செய்து விடுவான். மனதோடு போராடுவது மிகவும் கஷ்டம். ஆனால் ஒழுக்கத்தைக் கடைப்பிடிக்க மனதோடு போராடியாக வேண்டும்.

மேலெழுந்தவாரியாகப் புறத்தில் நல்லதைச் செய்பவர்கள் தங்களைத் தூய்மை உடையவர்களென்று சொல்லிக்கொள்கிறார்கள். நான் சிறுவனாக இருந்தபொழுது கிறிஸ்துநாதருடைய பண்பில் எனக்குப் பெருவிருப்பம் இருந்தது ஞாபகமிருக்கிறது. பைபிளில் வருகின்ற திருமண விருந்தைப் பற்றி நான் படித்தேன். நான் உடனே புத்தகத்தை மூடிவைத்து விட்டுப் பகர்ந்ததாவது: "ஏசுநாதர் மது அருந்தியிருக்கிறார்; மாமிசம் சாப்பிட்டிருக்கிறார்; ஆகையால் அவர் மகானாக இருந்திருக்க முடியாது."

மெய்ப்பொருள் காண்பதிலிருந்து நாம் எப்பொழுதுமே தவறிவிடுகின்றோம். உண்பதும், உடுப்பதுவும் அற்ப விஷயங்கள். உண்பதிலும், உடுப்பதிலும் எந்த முட்டாளும் ஒழுங்காக இருந்துவிடலாம். அவற்றிற்கு அப்பாலிருப்பதைக் காண முயல்பவர் யார்? அவற்றிற்கு அப்பாலிருப்பதைக் காண்பதற்கு இதயப் பண்பு நமக்குத் தேவை. இந்தியாவில் ஒரு கூட்டத்தினர் சிலசமயம் ஒருநாளைக்கு இருபது முறை நீராடுகின்றனர். அவர்கள் தங்களை மிகவும் தூய்மையானவர்கள் என்று எண்ணிக் கொண்டு யாரையும் தொடமாட்டார்கள். குளிப்பதன் மூலம் ஒருவன் தூய்மை அடைய முடியுமென்றால் எப்பொழுதுமே நீரில் வசித்து வருகின்ற மீன்கள் பரிசுத்தமான உயிர்களாகி விடுமல்லவா! ஆகவே இத்தகைய புறத்தில் தென்படும் விஷயங்கள் மட்டும் தூய்மைகள் ஆகிவிடா.

குளிப்பதிலும், உடையணிவதிலும், உணவில் ஒழுங்குப்பாட்டைக் கடைப்பிடிப்பதிலும் கவனம் செலுத்துவது அவசியமே. ஆத்மீக ஒழுங்குப்பாட்டிற்கு அவை துணையாக இருக்கும்பொழுது அவைகளும் முக்கியத்துவம் பெறுகின்றன. ஆத்மீக ஒழுக்கத்துக்கு அவை துணையாக இல்லாதபொழுது அவைகளால் பிரயோஜனமில்லை. பசும் புல்லைத் தின்று கொண்டிருப்பதனால் மட்டும் ஒருவனுக்கு எந்த நன்மையும் விளைந்துவிடாது. முதன்மையானது ஆத்மீகம். மற்றவை அதற்குத் துணையாக இருக்கவேண்டும். ஆத்மீகம் இல்லாத புறத் தூய்மை பயனில்லை என்பதை நாம் சரியான முறையில் புரிந்துகொள்ள வேண்டும். இதை நாம் சரியாகப் புரிந்துகொள்ளாவிடில் நம்மை நாமே தாழ்த்திக்கொண்டவர்களாகி விடுவோம். ஆகையினால்தான் இவற்றைப் பற்றி நான் இவ்வளவு விளக்கமாகக் கூறிக் கொண்டிருக்கிறேன். (தொடரும்)

# துறவு

(ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்களின் சொற்பொழிவு)

மனதின்கண் உள்ள அழுக்குகளெல்லாம் நீங்கப்பெற்றவர்கள் யதிகள் ஆகிறார்கள். அவர்கள் ஆத்ம சொரூபத்தைத் தரிசிக்கின்றார்கள். 'யதி' என்ற சொல் துறவி அல்லது சந்நியாசி எனப் பொருள்படுகிறது. துறவியர்கள் பரம்பொருளைத் தரிசிக்கின்றார்கள். அநித்தியமான பிரபஞ்ச வாழ்க்கையைத் தியாகம் செய்வது அல்லது துறப்பது துறவு எனப்படுகிறது. அநித்தியமான உலக வாழ்க்கையைத் துறந்துவிட்டு நித்தியமாயுள்ள பாரமார்த்திகப் பெருவாழ்வைத் துறவிகள் பின்பற்றுகிறார்கள். வாழ்க்கையின் குறிக்கோள் மரணமிலாப் பெருவாழ்வு அடைவதாகும். மரணமிலாப் பெருவாழ்வு எதனால் அடையப்படுகிறது என்பதை விளக்குகின்ற கைவல்ய உபநிஷதப் பகுதி வருமாறு:

**न कर्मणा न प्रजया धनेन त्यागेनैके अमृतत्वमानशुः**

ந கர்மணா ந ப்ரஜயா தனேன
தியாகேனைகே அமிர்தத்வமானசு:

கர்மத்தால் அன்று, சந்தான விருத்தியினால் அன்று, செல்வத்தினால் அன்று, தியாகத்தாலேயே அமிர்தத்துவம் அல்லது மரணமிலாப் பெருவாழ்வு அடையப்பெறுகிறது. இவ்வுண்மையைச் சிவபெருமான் தம்முடைய சொருபத்தில் விளக்கிக்கொண்டிருக்கிறார். சிவபெருமான் திரிலோக குடும்பியாக இருக்கின்றார். அவர் தியாகராஜனாகவும் இருக்கின்றார். அவர் திரிலோக குடும்பியாக இருந்து பிரபஞ்ச வாழ்க்கையை முறையாக நடாத்திவருகின்றார். பிரபஞ்ச அதீதத்திலுள்ள பெருநிலைதான் நாம் அடையவேண்டிய பேறு என்பதை அவர் தியாகராஜனாக இருந்து நிரூபித்துக்கொண்டிருக்கிறார்.

அக வாழ்க்கையை ஆன்றோர்கள் நான்கு ஆசிரமங்களாகப் பகுத்திருக்கின்றார்கள். அவை முறையே பிரமச்சரிய ஆசிரமம், கிரஹஸ்த ஆசிரமம், வானப்பிரஸ்த ஆசிரமம், சந்நியாச ஆசிரமம் என்பனவாம். இவற்றுள் சந்நியாச ஆசிரமம் வாழ்க்கையின் உச்சநிலையில் இருக்கிறது. சிவபெருமான் இக்கோட்பாட்டைத் தம்முடைய சொருபத்தின் மூலமாக விளக்குகின்றார்.

தியாகம் அல்லது துறவு நான்கு ஆசிரமங்களிலும் இருக்கின்றது. பிரமச்சரிய விரதம் நான்கு ஆசிரமங்களிலும் இருப்பது போன்று தியாகம் அல்லது துறவும் நான்கு ஆசிரமங்களில் இருக்கிறது. முடிந்த நிலையிலுள்ள சந்நியாச ஆசிரமத்தில் துறவு முற்றுப்பெறுகிறது. ஜீவன் தன்னை முதல் மூன்று ஆசிரமங்களில் பக்குவப்படுத்தி வருகின்றான். சந்நியாச ஆசிரமத்தில் பக்குவத்தின் பூரணநிலையை எய்துகின்றான். தியாகம் வாழ்க்கையின் முடிந்த லட்சியம். அடையவேண்டிய பெருநிலையை அடைந்தான பிறகு தியாகத்தைத் தவிர அடைவதற்கு வேறொன்றும் இல்லை என்பதைப் பிரபஞ்ச சொருபமாக இருக்கின்ற பரம்பொருள் விளக்கி வருகின்றார். இக்கோட்பாட்டை நிரூபிப்பதற்குப் பிரபஞ்சத்தில் சான்று ஒன்று எடுத்துக்கொள்ளலாம். மரத்தில் பூ உண்டாகிறது. அது பிஞ்சு ஆகிறது. பிறகு அது காய் ஆகிறது. பிறகு அது கனிகிறது. கனிந்தான பிறகு அது மரத்தை விட்டுப் பிரிந்தாக வேண்டும். கனிந்த பிறகும் அது மரத்தில் ஒட்டிக்கொண்டிருப்பதில் பொருளில்லை. மரத்தினின்றும் பிரிவதன் வாயிலாகத்தான் அது நிறைநிலை எய்துகிறது. கனிந்தான பிறகு அது மரத்தினின்றும் பெற வேண்டியது ஒன்றுமில்லை. மரத்தை விட்டுப் பிரிந்து அது உலகுக்குப் பயன்படுகிறது. சிறு அளவில் இந்தக்கோட்பாடு பிரபஞ்ச வாழ்க்கையில் அமைந்திருக்கிறது. தாயின் வயிற்றில் சிசு உருவாகிக்கொண்டு வருகிறது. தாயின் கருப்பையில் முழு வடிவம் எடுத்தான பிறகு தாயின் கர்ப்பத்தைத் தியாகம் செய்து அதை விட்டு வெளியேறுவதுதான் அச்சிசு செய்ய வேண்டிய கிருத்தியமாகின்றது. கர்ப்பப்பையைச் சிசு தியாகம் பண்ணவிட்டால் சிசுவுக்கும் ஆபத்து, தாய்க்கும் ஆபத்து. தியாகத்தின் சிறப்பு ஆங்குத் தென்படுகிறது.

பெற்றெடுத்த பெண் குழந்தை ஒன்றைக் குடும்பத்தார் அன்போடு வளர்த்து வருகின்றார்கள். அப்பெண் பக்குவமாகும்பொழுது தக்க

கணவனிடத்தில் ஒப்படைப்பதன் மூலமாகப் பெற்றோர்கள் தியாகம் பண்ணுகிறார்கள். அப்படித் தியாகம் பண்ணுவதுதான் அவர்கள் கடமை. பிரபஞ்ச வாழ்க்கையிலேயே தியாகம் அமைந்திருக்கிறது. நாம் அதை ஓர்ந்து பார்க்கிறதில்லை. தியாகம் பண்ண வேண்டிய தருணம் வருகின்ற பொழுது எதைத் தியாகம்பண்ண வேண்டுமோ அதைத் தியாகம் பண்ண வேண்டியதுதான் முறை. தியாகத்தின் மூலம் ஒவ்வொரு உயிரும் புறப்பட்ட இடமாகிய பரம்பொருளிடம் திரும்பிப் போய்ச் சேருகின்றது. "வீடு பெற நில்" என்பது ஔவைப் பிராட்டியின் வாக்கு. வீடு என்பது என்ன? நம்முடைய யதாஸ்தானம் வீடாகும். வீட்டிலிருந்து புறப்பட்டுப்போகிற மனிதன் காரியங்களை முடித்துக்கொண்டு திரும்பி வீட்டுக்கு வருவது போன்று பரமன் என்னும் வீட்டை விட்டு வந்த உயிர்கள் காரியங்கள் முடிந்தான பிறகு பரமன் என்னும் வீட்டுக்குத் திரும்பிப் போய்ச் சேருகின்றன.

பிரபஞ்ச வாழ்க்கையில் பலப்பல காரியங்களைச் செய்வதற்காகப் பிரபஞ்சத்திற்கு உயிர்கள் வந்திருக்கின்றன. பிரபஞ்ச காரியங்களெல்லாம் முடிந்தான பிறகு பழையபடி பரமனென்னும் வீட்டிற்குப் போய்ச் சேருகின்றன. அப்படி உயிர்கள் பரமனிடம் சேர்வதைத்தான் வீடுபேறு என்கின்றோம். வீடுபேற்றிற்குப் பயிற்சி பெற்றுப் பிரபஞ்சத்தை விட்டு நீங்குவது துறவு அல்லது தியாகம் ஆகிறது.

தியாகம் அல்லது துறவு கஷ்டமானதா, சுலபமானதா என்பதை ஆராய்வோம். தியாகம் என்ன என்பதைப் பற்றி ஆராய்ந்து பார்த்தால் அதைவிடச் சுலபமானது ஒன்றுமில்லை என்பது விளங்கும். உலகைப் பற்றிப் பிடித்துக்கொண்டிருக்கும் போது பூ, பிஞ்சு, காய் ஆகியவற்றின் நிலையில் ஜீவர்கள் இருக்கிறார்கள். கனிகின்ற நிலைக்கு மனம் பக்குவப்பட்டான பிறகு பிரபஞ்சத்தை விட்டுப் பிரிவது பரமானந்தத்தை உண்டுபண்ணுகிறது.

ராமதீர்த்த சுவாமிகள் அமெரிக்காச் சென்றிருந்தபொழுது அமெரிக்க மக்கள் அவரைக் கேள்வி ஒன்று கேட்டார்கள். "நீங்கள் ஏன் இவ்வுலகைத் துறந்து விட்டீர்கள்?" என்பது அக்கேள்வியாகும். "அன்பர்களே! உலகத்தைத் துறந்தவர்கள் நீங்களேயல்லாமல் நான் அல்லன்" என்று அவர் பதில் சொன்னார். அவர் தந்த பதில் அவர்கட்கு விளங்கவில்லை. பெரியதன் பொருட்டுச் சிறியதைத் துறத்தல் 'துறத்தல்' என்பதற்குப் பொருளாகும். சான்று ஒன்றின் மூலம் இதை இன்னும் தெளிவாக்கலாம். குமாஸ்தா ஒருவன் ஓரிடத்தில் மாதம் ரூபாய் முந்நூறு சம்பளம் வாங்குவதாக வைத்துக்கொள்வோம். அவனுக்கு வேறொரு இடத்தில் மாதம் ரூபாய் அறுநூறு சம்பளம் வருவதாக வைத்துக் கொள்ளலாம். அறுநூறுரூபாய் சம்பளத்தை முன்னிட்டு முந்நூறு ரூபாய் சம்பளத்தைத் துறக்கின்றான். அப்படி அவன் துறப்பதுதான் முறை. இனி சுவாமி ராமதீர்த்தர் சொன்ன கருத்துக்கு வருவோம். அமெரிக்கர்கள் 'நீங்கள் ஏன் உலகத்தைத் துறந்துவிட்டீர்கள்?' என்று கேட்டபொழுது 'துறந்தவன் நானல்லன்; துறந்தவர்கள் நீங்கள்தாம்' என்று அவர் பதில் சொன்னார். அகிலாண்டமும் எனக்குச் சொந்தம். அகிலாண்டத்திலிருக்கின்ற அனைவரிடமும் நான் உறவாடுகின்றேன். ஆனால் நீங்களோ ஒரு சிறு பகுதியினரை மட்டும் உங்களுக்கு உறவு என்று வைத்துக்கொண்டு பெரும்பகுதியினரைத் துறந்து விட்டீர்கள். ஆகையால் துறந்தவர்கள் நீங்கள். துறந்தவன் நானல்லன் என்றார். அனைத்தையும் தன் மயமாகக் கருதுவது தியாகம் எனப்படுகிறது. சிறுமையையும், அஞ்ஞானத்தையும், சிறு வாழ்வையும் ஒதுக்கித் தள்ளுவது தியாகம் எனப்படுகிறது. துறவுக்கு இது பொருள் என்றால் இதைச் செய்வதற்கு ஆளில்லை என்று சொல்வது பக்குவமானவர்களில்லை என்று பொருள் படுகிறது. மனபரிபாகமடைந்தவர்கள் சிறியதை ஒதுக்கித்தள்ளி விட்டுப் பெரியதைப் பிடித்துக்கொள்ளுகின்றார்கள். சிறியதை ஒதுக்கித்தள்ளுவது என்று கூறுமிடத்துத் துறவுக்கு எதிர்மறையில் விளக்கம் தருகின்றோம். பெரியதைப் பற்றிப் பிடிப்பது என்று கூறுமிடத்துத் துறவுக்கு உடன்பாட்டில் விளக்கம் தருகின்றோம். 'சந்நியாசம்' என்ற சொல்லுக்கு எதிர்மறை விளக்கம் துறத்தல் என்பதாகும். சந்நியாசம் என்ற

சொல்லுக்கு உடன்பாட்டு விளக்கம் 'நியாசம்' என்பதாகும்.

தேவாராதனையில் அங்க நியாசம், கர நியாசம் என்ற பகுதிகள் உண்டு. பூஜை செய்கின்றவர்கள் தங்களுடைய கரங்களைத் தெய்வ வழிபாட்டுக்கென்றே பயன்படுத்துவோம் என்று சங்கல்பிக்குமிடத்து அது கர நியாசமாகிறது. அதை ஆங்கிலத்தில் Sublimation என்று சொல்லலாம்.

மலையிலிருந்து நீர் அருவியாக வழிந்துகொண்டிருக்கிறது. நீரை அதன் போக்கில்விட்டு விட்டால் அது ஓடையாகவோ, ஆறாகவோ ஓடிச் சமுத்திரத்தை அடைகிறது. இப்படி விழுகிற நீரைக் குழாய் வழியாகக் கொண்டு வந்து சக்கரத்தைச் சுழற்றும்படி செய்து மின்சக்தியாக மாற்றுகின்றார்கள். ஆகர்ஷண சக்தி என்னும் சாமான்ய சக்தியை மின்சக்தி என்னும் மேலான சக்தியாக மாற்றுமிடத்து, அது நியாசம் பண்ணப்பட்டதாகிறது. கீழ் நிலையிலிருப்பதை மேல் நிலைக்கு உரியதாக மாற்றியமைக்கின்ற பொழுது அது நியாசம் எனப்படுகிறது. சம் + நியாசம் என்பது சந்நியாசம் ஆகிறது. சம்+நியாசம் என்பது ஆங்கிலத்தில் Total sublimation என்பதாகிறது. தன்னுடைய ஜீவிதம் முழுவதும் உலகுக்கு உரியதன்று என்றும், தெய்வத்துக்கே முற்றும் உரியதென்றும் ஒருவன் தன் வாழ்க்கையை மேலான வாழ்க்கையாகத் திருத்தியமைப்பது சந்நியாசம் ஆகிறது. சந்நியாசம் பிறப்பை முன்னிட்டு அமைவதன்று. பண்பை முன்னிட்டே சந்நியாசம் அமைகின்றது.

ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் சிறந்த துறவியாக இருந்தார். அவர் தம் வாழ்வு முழுவதையும் மேலாம் காரியத்திற்குப் பயன்படுத்தினார். சிறு நெறியையும், சிறு வாழ்வையும் துறந்து பெருவாழ்வைச் சிக்கெனப் பிடித்தார். அவர் மேற்கொண்ட சந்நியாசம் அவருக்கும் உலகுக்கும் சிறந்த பயன் தந்தது. சந்நியாசத்தின் மூலமாக உலகம் என்ன பயனடைகிறது என்பதைச் சிவபெருமான் தியாகராஜனாக இருந்து விளக்குகின்றார். பிரபஞ்ச வாழ்வு என்னும் பாற்கடலை அசுரர்களும், தேவர்களும் கடைந்தார்கள் என்பது புராண வரலாறு. தேவர்களும், அசுரர்களும் ஒன்று சேரமாட்டார்கள். பாற்கடலைக் கடைவதை முன்னிட்டு அவர்கள் ஒன்று சேர்ந்தார்கள். பாற்கடலைக் கடைவது என்பது உலக வாழ்க்கையை நிறைவேற்றுவது என்பதாகிறது. தேவர்களும், அசுரர்களும் ஒன்று சேரமாட்டார்கள் என்பது நல்லவர்களும், கெட்டவர்களும் கூடி இருந்து எக்காரியத்திலும் ஈடுபடமாட்டார்கள் என்பதைக் குறிக்கிறது. உலக வாழ்க்கையில் அவர்களுக்கிடையில் ஒற்றுமை வருகிறது. வியாபாரம் செய்தல் என்னும் உலக காரியத்தை நல்லவனும் செய்கின்றான், கெட்டவனும் செய்கின்றான். நல்லவன் வைத்திருக்கின்ற கடைக்குக் கெட்டவன் வந்து ஏதாவதொரு சாமான் கேட்டால், 'இவன் கெட்டவன்; இவனுக்குச் சாமான் தரக்கூடாது' என்று நல்லவன் கூறமாட்டான். கெட்டவன் ஒருவன் கடையில் நல்லவன் வந்து சாமான் கேட்டாலும் அவன் தருவான். வாழ்க்கைத் திட்டத்தில் நல்லவர்கள், கெட்டவர்கள் ஆகிய இருவர்களும் கலந்துகொள்கிறார்கள். உலக வாழ்க்கை வாழ்வதுதான் பாற்கடலைக் கடைவதாகிறது. பாற்கடலைக் கடைந்தபொழுது லட்சுமிதேவி வந்தாளென்று புராணம் கூறுகிறது. உலகவாழ்க்கையை நன்கு நடாத்தினால் பணம் சம்பாதிக்கலாம் என்பது அதற்குப் பொருள். ஏதோ ஒரு போக்கில் பணம் தேடுவதில் நல்லவர்கள், கெட்டவர்களாகிய இருதரத்தாரும் ஈடுபடுகின்றார்கள். இருதரத்தாருக்கும் பணம் வாய்க்கிறது. பாற்கடலைக் கடைந்தபொழுது சரசுவதிதேவி வந்ததாகப் புராணம் கூறுகிறது. வாழ்க்கையைப் பயன்படுத்தினால் நல்லவர்கள், கெட்டவர்களாகிய இருவரும் கல்வி பெறலாம் என்பது இதன் பொருள். பாற்கடலைக் கடைந்த பொழுது கௌஸ்துபம் என்ற ஆபரணம் வந்ததாகப் புராணம் கூறுகிறது. வாழ்க்கையைப் பயன்படுத்தினால் நல்லவர்களும், கெட்டவர்களும் பொருள்களைப் பெறலாம் என்பது இதன் பொருள். பாற்கடலைக் கடைந்தபொழுது கற்பக விருட்சம் வந்ததாகக் கூறப்படுகிறது. வாழ்க்கையைச் சரியாகப் பயன்படுத்தினால் பெரிய பெரிய திட்டங்கள் போட்டுத் தொழிற்சாலைகள் அமைத்துச் சாமான்ய மூலப்பொருள்களையெல்லாம் விலையுயர்ந்த பொருள்களாக நாம்

விரும்பியவாறு மாற்றி யமைக்கலாம் என்பது அதன் பொருளாகும். இப்படி வாழ்க்கையைச் சிறந்த வாழ்க்கையாக மாற்றியமைப்பது வாழ்க்கைத் திட்டமாகும். பாற்கடலைக் கடைந்தபொழுது வாசுகி என்ற சர்ப்பத்தைக் கயிருகவும், மகாமேரு என்ற மலையை மத்தாகவும் பயன்படுத்தினர்கள். வாசுகி விஷத்தைக் கக்கியது. அவ்விஷம் தேவர்கள், அசுரர்கள் ஆகிய இருகூட்டத்தினரையும் சூழ்ந்து வந்தது. அதினின்றும் தப்பிக்க அவ்விரு கூட்டத்தினரும் பாதாளலோகம் சென்ருர்கள். விஷம் தொடர்ந்து அவர்களைப் பற்ற அங்கும் சென்றது. அவர்கள் மத்திய லோகத்துக்குப் போனர்கள். அவர்களை அங்கும் விஷம் விடவில்லை. சொர்க்கத்துக்குப் போனர்கள். விஷம் அங்கும் அவர்களை விடாது பின்பற்றியது. கடைசியாக அவர்கள் சிவபெருமானுடைய பாதத்தில் சரணுகதி யடைந்தார்கள். அவர்களைக் காக்கும் பொருட்டுச் சிவபெருமான் அவ்விஷத்தை ஏற்று அருந்தி கண்டத்தில் நிறுத்தினர். அச்செயலை முன்னிட்டு அவர் ஸ்ரீ கண்டன் அல்லது நீலகண்டன் ஆனர். தேவர்களும் அசுரர்களும் காப்பாற்றப்பட்டார்கள். தேவர்களும், அசுரர்களும் பாற்கடலைக்கடைந்தபொழுது வந்த திரவியங்களில் சிவனர் பங்கு கேட்கவில்லை. ஆனல் விஷம் என்கின்ற மரணம் வந்தபொழுது அதைத் தம்முடையது என்று அவர் ஏற்றுக்கொண்டார். சிவனர் தியாகராஜா. உலகுக்குக் கேடு செய்ய வந்த விஷத்தை உண்டு தேவர்களையும், அசுரர்களையும் அவர் காப்பாற்றினர். சிவனுருடைய செயல் துறவி என்ன செய்ய வேண்டுமென்பதை விளக்கிக்காட்டுகிறது. ஒருவன் உலகம் ஊட்டுகின்ற மையல் நிறைந்த திரவியங்களில் கருத்துச் செலுத்தலாகாது. உலகம் நலனடைதல் பொருட்டு அவன் பாரமார்த்திகப் பெருவாழ்வில் ஈடுபட வேண்டும். அப்படி ஈடுபடுவதன் மூலம் அவன் உலகை நல்வழிக்குக் கொண்டு வருகின்ருன். உலகம் தருகிற இன்பத்தில் பங்குக்குப் போகாது உலகைத் துன்புறுத்துகிற துன்பத்தை ஏற்றுக்கொள்பவன் துறவியாகின்ருன். சுவாமி விவேகானந்தர் பகர்வதாவது: 'பிரபஞ்ச வாழ்க்கையைப் போகத்துக்குரியதாக்கிப் பயன்படுத்துபவன் குடும்பி. பெரிய லட்சியத்தின் பொருட்டுப் பிரபஞ்ச வாழ்க்கைக்குத் தன்னைச் செத்ததற்கு நிகராக்குபவன் துறவி. அதைச் செயலில் நிரூபிப்பதற்குச் சுவாமி விவேகானந்தர் வாழ்க்கையில் ஒரு சந்தர்ப்பம் வந்தது.

கல்கத்தாவில் புதியதாகப் பிளேக் என்னும் நோய் தோன்றியது. அக்காலத்தில் பிளேக் நோயை மக்கள் யமனுகக் கருதினர். பிளேக் நோய் கல்கத்தா முழுவதும் பரவியது. நோய் வாய்ப்பட்டவனை அங்கேயே விட்டுவிட்டு அவன் உறவினர்கள் ஓடிப்போய் விட்டார்கள். பிளேக் நிவாரண வேலைசெய்வதற்குத் துறவியர்களை ஒன்று சேர்த்து அவர்களுக்கு விவேகானந்தர் பகர்ந்ததாவது: ''உயிர்ப்பற்று வைத்திருப்பவர்கள் ஓடுகின்றனர். துறவியர்களாகிய நாம் பெரிய லட்சியத்தின் பொருட்டு உயிர்ப்பற்றைத் துறந்தவர்களாக இருக்கின்ருேம். நோய் வாய்ப்பட்டிருக்கின்றவர்களை நாராயண சொருபங்களாகக் கருதி அவர்களுக்குச் சிகிச்சை செய்யும் பணிவிடையில் இறங்கலாம். நம்முடைய சிகிச்சைக்கு மீறி அவர்கள் இறந்து போவார்களானல் அது அவர்களுடைய பிராரப்த கர்மம். அவர்களுக்குப் பணிவிடை பண்ணுவது நம்முடைய கடமை.'' சுவாமிஜியின் உரையைக் கேட்ட துறவியர்கள் தீவிரமாக நோயாளிகளுக்குப் பணிவிடை செய்வதில் இறங்கினர்கள். நோயாளிகளினுடைய உற்ருர் உறவினர்கள் ஓட்டம் பிடித்து விட்டார்கள். வேற்ருர் போன்றிருந்த துறவியர்கள் அவர்களுக்குப் பணிவிடை செய்தார்கள். சில நோயாளிகள் குணமடைந்தனர்; சில நோயாளிகள் இறந்து போய்விட்டனர். சிவபெருமான் விஷத்தை உண்ட பாங்கில் துறவியர்கள் அவர்களுக்குப் பணிவிடை செய்வதில் ஈடுபட்டார்கள். இங்குத் துறவி யார் என்பதற்கு விளக்கம் கிடைக்கிறது. பெரிய லட்சியத்தின் பொருட்டு உலக இன்பத்துக்குத் தன்னைச் செத்ததுக்கு நிகராக்குபவன் துறவியாகின்ருன். சிறிய வாழ்க்கையைத் துறந்துவிட்டுப் பெரிய வாழ்க்கைக்குத் தன்னை அறவே ஒப்படைக்கின்றவன் துறவியாகின்ருன். இத்தகைய பாங்குடையவர்கள் சமுதாயத்தில் எவ்வளவுக்

கெவ்வளவு தோன்றுகின்றார்களோ, அவ்வள வுக்கவ்வளவு சமுதாயம் நலனடைகிறது. துற வியர்கள் தங்களுக்கென வாழாது உலக நன் மைக்காக வென்று வாழ்கின்றார்கள். உலகம் அதன் மூலம் பெரிய நலனடைகின்றது. 'They alone live, who live for the welfare of others. The others are more dead than alive.' என்பது விவேகானந்தர் வாக்கு. பிறர் நலனுக் கென்று வாழ்பவர்களே உண்மையில் வாழ் கின்றவர்களாகின்றார்கள். மற்றவர்கள் குற்று யிராக இருந்து நடமாடும் பிணத்துக்கு நிகரா கிறார்கள். இங்ஙனம் சுவாமி விவேகானந்தர் பகர்ந்திருக்க நான்கு வர்ணங்களுள் சந்நியாச ஆச்ரமத்திற்குத் தகுதியுடையவர் யார் என்ற கேள்வி எழுகிறது. அந்தக் கேள்விக்கு மகா பாரதத்தில் விடை வருகிறது. யட்சன் யுதிஷ் டிரனைப் பார்த்துச் சில கேள்விகள் கேட்கின் றான். அவற்றுள் ஒரு கேள்வி 'பிராமணன் யார்?' என்பதாகும். தனக்கென வாழாது பிறர்க்கென வாழுகின்றவன் பிராமணன் ஆகின்றான். எக்குடியில் பிறந்தானென்பது முக்கியமானதன்று. எத்தகைய மனபரிபாகம் அடைந்திருக்கிறான் என்பதே முக்கியமானது. மனபரிபாகத்தில் மேலோனானவனே பிராம ணன் ஆகின்றான். பிராமணனே சந்நியாசி யாகத் தகுதியுடையவன். கீதையிலும் பகவான் 'குணத்தை அடிப்படையாகக் கொண்டுதான் வருணம் தீர்மானிக்கப்படுகிறது' என்று கூறு கின்றார்.

**चातुर्वर्ण्यं मया सृष्टं गुणकर्मविभागशः**

சாதுர்வர்ண்யம் மயா ஸ்ருஸ்டம் குணகர்ம விபாகச:

அந்தணத் தன்மை மனபரிபாகத்தை அடிப் படையாகக் கொண்டதேயன்றி பிறப்பை அடிப்படையாகக் கொண்டதன்று. வள்ளு வரும் அந்தணர் யார் என்பதற்கு விளக்கம் தந்திருக்கிறார்.

"அந்தணர் என்போர் அறவோர்மற் றெவ்வு
செந்தண்மை பூண்டொழுக லான்." [யிர்க்கும்

இத்தகைய மனபரிபாகமடைந்தவர்கள் உலக நன்மைக்காகத் தங்களுடைய ஜீவிதத்தை ஒப் படைக்கின்றார்கள். தங்கள் உள்ளத்தை அந்தணர் நிலைக்கு உயர்த்திக் கொண்டவர் களே துறவிகளாக முடியும்.

மரத்தில் நல்ல கனிகள் ஏராளமாக உண் டாகுமானால் அம்மரம் செழிப்பாகவும் ஆரோக் கியமாகவும் வளர்ந்திருக்கிறது என்பது பொருளாகிறது. அம்மரம் நல்ல பலனைத் தரும். கெட்டுப்போன மரத்திலோ பிஞ்சு களும் காய்களும் வெம்பி விழுந்து விடுகின்றன. அம்மரத்திலிருந்து நல்ல கனிகளை பெறமுடி யாது. செழிப்பான மரத்துக்கு நிகராகச் சமு தாயம் நல்ல சமுதாயமாக இருக்குமானால் நல்ல துறவிகள் அதில் தோன்றிக்கொண்டே யிருப்பார்கள். க்ஷீணதசை அடைந்த சமுதா யத்தில் நல்ல துறவியர்கள் தோன்றமாட்டார் கள். சமுதாயம் நல்ல சமுதாயம் ஆகவேண்டும். நல்ல மரத்திலிருந்து வருகின்ற கனிகள் உலக மக்களுக்கு நல்லுணவு ஆகின்றன. சமுதாயத் தில் துறவியர்கள் ஏராளமாகத் தோன்றுவார் களானால், அப்படி அவர்கள் தோன்றுவது சமுதாயத்துக்கு நலனாக வந்து அமைகிறது. பண்பட்ட துறவியர்களைச் சமுதாயத்தில் காண்பது அரிதாகிவிட்டால் சமுதாயம் கெட் டுப்போனதற்கு அதுவே அறிகுறியாகும்.

இராமகிருஷ்ணரின் சிஷ்யர் ஒருவரிடம் அன்பர் ஒருவர் பகர்ந்ததாவது: "நான் இமய மலையிலுள்ள ரிஷிகேஷத்துக்குப் போயிருந் தேன். அங்கு லட்சக்கணக்கான துறவியர் களைச் சந்தித்தேன். அவர்கள் பொதுமக்களின் உணவை உண்டு சோம்பேறிகளாகத் திரிகின் றார்கள். அவர்கள் நாட்டைப் பாழ்படுத்துபவர் களாகின்றார்கள்." அதற்கு இராமகிருஷ்ண ரின் சிஷ்யர் பகர்ந்ததாவது: "அப்படி அவர் கள் இருப்பதற்குக் குடும்பிகளாகிய நீங்களே பொறுப்பாளிகள் ஆவீர்கள்". "ஏன் எங்கள் மீது குற்றம் சாட்டுகிறீர்கள்?" என்று அவ்வன் பர் கேட்டார். "ஆங்கிருக்கும் துறவியர்களெல் லாம் ஆகாயத்திலிருந்து கீழே விழுந்தவர் களல்லர். குடும்பிகளாகிய நீங்கள் நெறியான வாழ்க்கை வாழ்ந்து உங்கள் மனதைப் பண் படுத்தி நல்ல சந்ததிகளைத் தோற்றுவித் திருந்தால் நல்ல சந்நியாசிகள் உருவாகியிருப் பார்கள். நீங்கள் கீழ்த்தரமான வாழ்க்கை வாழ்ந்து காமப் பித்தர்களாகஇருந்து புத்திரர் களைத் தோற்றுவித்ததனால் மோசமான துற விகள் உருவாகியிருக்கிறார்கள்." இங்ஙனம் விவேகானந்தர் பகர்ந்தார். (தொடரும்)

# ஸ்ரீ லலிதா வியாக்கியானம்-117

683. शोभना सुलभागतिः சோபனா ஸுலபாகதி:—ஸோபனம் என்னும் கதியை எளிதில் வழங்கவல்லவள் என்பது இதன் பொருள்.

புருஷார்த்தங்கள் நான்கு இருக்கின்றன. அவை முறையே தர்மம், அர்த்தம், காமம், மோட்சம் அல்லது அறம், பொருள், இன்பம், வீடு எனப் பொருள்படுகின்றன. தர்மத்தை விட்டுப் பிசகாதிருப்பது மானுட ஜன்மத்தின் குறிக்கோளாகும். தர்மபுத்திரனாகிய யுதிஷ்டிரன் எந்தக் காரணத்தைக் கொண்டும் அறநெறியினின்று பிசகவில்லை. தர்மத்தில் உறுதியாக நிலைத்திருப்பதே அவன் நாடிய கதி அல்லது குறிக்கோளாகும். பொருளையோ, இன்பத்தையோ, முக்தியையோ அவன் நாடியது கிடையாது. யாண்டும் தர்மத்தைக் கடைப்பிடிப்பதே அவனுடைய நோக்கமாக இருந்தது. அதைக் கடைப்பிடிப்பதில் அவனுக்குச்சிரமம் ஏதும் உண்டாகவில்லை. சுலபமாக அந்நெறியில் அவன் நிலைத்து இருந்தான். அதன் விளைவாகப் பொருளும் போகமும், வீடுபேறும் சுலபமாக அவனுக்கு வந்து வாய்ப்பனவாயின. யுதிஷ்டிரனைப் பொறுத்த அளவில் தர்மம் ஒன்றே அவனுக்கு நெறியும் குறியுமாக இருந்தன. ஆகையினால் மண்ணுலகத்தவர் அனைவர்க்கும் அவன் யாண்டும் தர்மராஜன் ஆகின்றான். இது அம்பாளுடைய அனுக்ரஹத்தால் நிறைவேறுவதாயிற்று. இனி பொருளையும் போகத்தையும் நாடுபவர்கள் ஏராளமாக உலகில் இருக்கிறார்கள். அவரவர் நாட்டத்திற்கேற்ப அம்பிகை அந்தச் சோபனங்களை அன்னவர்களுக்கு எடுத்து வழங்குகின்றாள். நிலையற்ற அவைகளின் வாயிலாகவும் ஜீவாத்மாக்கள் பரிபக்குவமடையக் கடமைப்பட்டிருக்கின்றனர்.

இனி சோபனங்களுள் உச்சநிலையிலிருப்பது மோட்ச சாம்ராஜ்யம். அந்த மோட்சத்தைத் தவிர வேறு எதையும் பொருள்படுத்தாத பரிபாகம் அடையப் பெற்றவனாக ரிஷிபுத்திரனாகிய நசிகேதன் இருந்தான். மோட்ச மார்க்கத்தில் உறுதியாக நிலை நிற்பது அவ்விளைஞனுக்குச் சுலபமாக அமைந்தது. அத்தகைய சோபனம் அவ்வளவு சுலபமாக அவனுக்கு வாய்த்தது அம்பிகையின் அனுக்ரஹத்தாலேயாம். கதி என்னும் சொல் மோட்சத்தையே சிறப்பாகக் குறிக்கிறது. மனிதன் அடைகிற ஏனைய நிலைகளெல்லாம் தாற்காலிகமாக அமைகின்றன. முக்தியாம் வீடுபேறே நிலைபேறு உடையது. எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமானே மெய்யே உன் பொன் அடிகள் கண்டு இன்று வீடுற்றேன் என்றார் மாணிக்கவாசகர். ஆதலால் வீடுபேறு கதிகளனைத்திலும் முடிந்ததும் மேலானதுமாக இருக்கிறது. அன்னையின் அருளுக்குப் பாத்திரமாகிறவர்கள் இத்தகைய சோபனத்தை மிகச் சுலபமாக அடையப்பெறலாம் என்பது இந்த நாமத்தின் கருத்து.

அர்ச்சனைக்கு இந்த நாமத்தைப் பயன்படுத்துகிறபொழுது ஸோபனாயை சுலபாயை கத்யைநம: என்று பிரித்துச் சொல்லவேண்டும்.

684. राजराजेश्वरी ராஜராஜேச்வரீ—மன்னாதி மன்னர்களுக்கெல்லாம் இறைவியாக இருப்பவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

தேவர்களுக்கெல்லாம் தலைவனாக இருப்பவன் தேவராஜன் எனப்படுகிறான். ஆங்காங்குள்ள சமுதாயங்களுக்கு அரசர்களாக இருப்பவர்கள் ராஜாக்கள் எனப்படுகிறார்கள். பல ராஜாக்களுக்கு அதிபதியாக இருக்கிற சக்ரவர்த்தி ராஜராஜன் எனப் போற்றப்படுகிறான். இத்தகைய ராஜாதி ராஜர்களுக்கெல்லாம் ஈசுவரியாக அம்பிகை இலங்குகின்றாள். இதுவே இயற்கையின் நியதி. மும்மூர்த்திகளும், தேவாதிதேவர்களும், ராஜாதிராஜர்களும் தாம் தாம் படைத்திருக்கும் சைதன்யத்தையும், ஐச்வர்யத்தையும் அம்பிகையினிடத்திருந்தே பெற்றிருக்கிறார்கள். ஜட உலகிலுள்ள அமைப்பு ஒன்றை இதற்கு நல்ல எடுத்துக்காட்டாக இயம்பலாம். இரவில் ஊர் முழுவதுக்கும் வெளிச்சம் தருவது மின்விளக்கு Electric Light. திரள்திரளாகக் கூடியிருக்கும் பெருங்கூட்டத்தில் ஒருவருடைய பேச்சு எல்லார் காதிலும் விழும்படி செய்வது ஒலி பெருக்கி. கோடையின் புழுக்கத்தில் எல்

லார்க்கும் காற்றை வீசி வெப்பத்தின் கொடுமையைத் தணிப்பது மின்விசிறி Electric Fan. விறகில்லாத பெரிய பட்டணங்களில் சமைப்பதற்கு உதவுவது மின் அடுப்பு Electric Oven. பெரிய பெரிய தொழிற்சாலைகளில் யந்திரங்களை இயக்குவது மின்சக்தி. இத்தனைவிதமான பாங்குகளிலே மக்களுக்குப் பயன்பட்டு வருகின்ற விதவிதமான கருவி கரணங்களுக்கு விசை வழங்கிவருவது மின்சக்தி. அந்த சக்தியின் சாந்நித்தியம் இல்லாவிட்டால் இக்கருவிகள் யாவும் செயலற்றுப் போகின்றன. அதே விதத்தில் பிரம்மாண்டத்தின் அமைப்பில் பெரிய பெரிய ராஜபதவிகளை வகித்து வரும் மூர்த்திகளுக்கு அம்பிகையின் ஆத்ம சக்தி என்னும் சேதனம் இல்லாது போய்விடுமானால் அத்தகைய மூர்த்திகள் எல்லாரும் ஜடநிலை எய்துவர். அன்னவர்களை அத்தகைய அரியபெரிய கிருத்தியங்களில் இயக்கிவருவது அம்பிகையாதலால் அவள் ராஜராஜேச்வரீ என்னும் நாமம் பெற்றுள்ளாள். ஈச்வரியின் ஆதிக்கத்துக்கு மேலானது எதுவும் இருக்க முடியாது. அத்தகைய ஆதிசக்தியை உள்ளன்போடு உள்குவது நல்ல ஆத்ம சாதனமாகும்.

685. राज्यदायिनी ராஜ்யதாயினீ—ராஜ்யத்தைக் கொடுப்பவள் என்பது அதன் பொருள்.

மஹா விஷ்ணுவுக்கு ராஜ்யமாயிருப்பது வைகுண்டம். சிவனுக்கு ராஜ்யமாக இருப்பது கைலயங்கிரி. இந்திரனுக்கு ராஜ்யமாக இருப்பது இந்திரலோகம். படைப்புத் தெய்வமாகிய சதுர்முக பிரம்மாவுக்கு இருப்பிடமாயிருப்பது பிரம்மலோகம். குடித்தனமோ, துரைத்தனமோ என்பது பழமொழி. ஒரு குடும்பத்தை நடாத்துவதும் ஒரு சாம்ராஜ்யத்தை நிருவகிப்பதும் ஒரே திட்டத்தில் அமைந்திருக்கின்றன. வண்ணத்தில் ஒன்று சிறியது எனினும் நடைமுறையில் மற்றதற்கு அது நிகராகிறது. குடும்பத்தை ஒழுங்காகக் கொண்டு செலுத்துகிற நன்மக்கள் இருக்கின்றனர். குறைபாடு ஏதுமில்லாது இழுக்கு ஏதுமில்லாது ஒரு குடும்பத்தை நிர்வகிப்பது பாராட்டத்தக்க செயலாகிறது. குடும்பத்துக்குத் தலைவனாக இருக்கின்றவன் மனைவி மக்களை நன்கு பராமரிக்கக் கடமைப்பட்டிருக்கிறான். உற்றார் உறவினர்க்கு அவன் செய்ய வேண்டிய கடமைகளையெல்லாம் முறையாகச் செய்து முடிப்பது அவனது அறப்பணியாகின்றது. அக்கம் பக்கத்திலிருக்கின்ற ஏனையவர்களுக்கும் தன்னால் இயலுகிற கைங்கரியங்களை முறையாகச் செய்து முடிப்பது அவன் கடமையாகின்றது. ஏழை எளியவர்களைக் காப்பாற்றவும் அவன் கடமைப்பட்டிருக்கின்றான். இத்தனை செயல்களை ஒழுங்காக நிறைவேற்றுவது ஒரு ராஜ்யத்தைப் பரிபாலிப்பதற்கு நிகராகிறது. ஆகையினால்தான் குடித்தனமோ, துரைத்தனமோ என்னும் கொள்கை உருவெடுத்திருக்கிறது. அம்பிகையின் அருளுக்குப் பாத்திரமாகிற குடிமகன் ஒருவனே இத்தகைய குடும்பப் பாரங்களை யெல்லாம் முறையாக நிறைவேற்ற வல்லவனாகின்றான். இங்ஙனம் அந்தந்த தெய்வங்களுக்கும், தேவதைகளுக்கும் ஏற்ற ராஜ்யங்களை அன்னை பராசக்தி பகுத்து எடுத்துக் கொடுத்திருப்பதால் அவள் ராஜ்யதாயினீ என்னும் பெயர் பெற்றுள்ளாள்.

686. राज्यवल्लभा ராஜ்யவல்லபா—ராஜ்யங்களில் பிரியம் வைத்துள்ளவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

தகுதிக்கேற்றவாறு வெவ்வேறு மூர்த்திகளுக்கு ஏற்ற ராஜ்யங்களை வழங்கியிருப்பது மல்லாது அன்னவர்களால் அத்தகைய ராஜ்யங்கள் இனிது நடைபெற்று வருவதால் அம்பிகை அவர்களிடத்தும், அவைகளிடத்தும் அன்பு மிக வைத்திருக்கிறாள். அந்தந்த ராஜ்யத்துக்குரிய ராஜாக்கள் தாங்கள் ராஜ்யத்தைப் பெற்றிருப்பது அம்பிகையின் அனுக்ரஹத்தால் என்று உணரக் கடமைப்பட்டிருக்கின்றனர். அம்பிகை கொடுத்துள்ள ராஜ்யத்தில் ஒவ்வொருவரும் பற்று மிக வைக்கவேண்டும். அதை நன்றாகப் பராமரிக்கவேண்டும். ராஜ்யத்தை நன்றாகப் பராமரிப்பது அம்பிகையின் வழிபாடாகும். அம்பிகையின் அருளாலேயே ராஜ்யம் ஒன்று ராஜன் ஒருவனுக்கு வாய்த்திருக்கிறது என்று உணருவதும் நல்ல அம்பிகை உபாசனையாகிறது. இங்ஙனம் அந்தந்த ராஜாக்கள் பெற்றுள்ள பதவிகளெல்லாம் அம்பிகையினிடத்திருந்து வந்தவை என்று உணருவதும் அவரவர் ஆட்சிமுறையை

ஒழுங்காக நடாத்திவருவதும் பிசகின்றி நிகழு மாயின் அம்பிகை அதைக் குறித்துப் பரம பூரிப்பு எய்துகிருள். இதுவே இந்த நாமத்தின் பொருளாகும்.

687. राजत्कृपा ராஜத்க்ருபா—அத்யந்த கிருபையோடு கூடியவள்.

இரக்கம் காட்டுதலில் பாகுபாடு உண்டு. அது அவரவர் படைத்துள்ள மனப்பான்மை யைப் பொறுத்ததாகும். மனப்பான்மையில் மேலோரும் இருக்கிறார்கள்; கீழோரும் இருக் கிறார்கள். பிறர்க்கு இரக்கம் அல்லது கிருபை காட்டவேண்டிய அவசியம் வருமிடத்து மேலோர்கள் அக்கிருபையைத் தங்கு தடை யின்றிக் காட்டுகின்றனர். சான்று ஒன்று எடுத்துக் கொள்ளுவோம். தம்பி சுக்ரீவனு டைய மனைவியை வாலி பலாத்காரமாக அபகரித்துக்கொண்டதனல் அவனுக்கு மரண தண்டனை விதிக்க ஸ்ரீ ராமன் தீர்மானித்து விட்டான். தீர்மானத்துக்கேற்ற செயலையும் சாதித்துவிட்டான். தான் செய்த குற்றத்தை வாலி உள்ளூர உணர்ந்தான். அதற்குக் கைம் மாருக ஸ்ரீ ராமன் வாலிக்கு மோட்சத்தைக் கொடுத்தருளினன். அதை நல்கியது ஸ்ரீ ராம னுடைய எல்லையில் அடங்காத கிருபைக்குச் சான்ருகிறது. தெய்வத்தின் பாங்கு இத் தகையது. அறிவிலிகளாகிய ஜீவாத்மாக்கள் செய்த குற்றத்தை உணர்ந்து தெய்வத்திடம் அனுக்ரஹம் கேட்கிறபொழுது அது தாராள மாக வருகிறது. அன்னை பராசக்தி தாய் உள் ளம் படைத்தவள். அவளிடத்துத் தஞ்சம் அடைபவர்களுக்கு அவள் எல்லையில் அடங் காத கிருபையை எடுத்து வழங்குகின்ருள். 'அம்பிகையைச் சரண்புகுந்தால் அதிகம் வரம் பெறலாம்' என்பது சுப்ரமணிய பாரதியாரின் வாக்கு. அவர் அம்பிகையின் உபாசகர். அவர் உள்ளபடி இயம்பியிருக்கிருர். அம்பிகையின் உபாசகர்கள் இவ்வுண்மையை அறியவும் அதை நன்கு பயன்படுத்தவும் செய்வார்களாக.

688. राजपीठनिवेशितनिजाश्रिता ராஜபீட நிவேசிதநிஜாச்ரிதா — தன்னை உபாசிக் கின்றவர்களுக்கு ராஜபீடத்துக்கு ஒப்பான பெரிய பதவியில் இருக்கும்படி அனுக்ரஹம் செய்கிறவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

'வேண்ட முழுவதும் தருவோய் நீ' என் பது வாதவூரருடைய மணிவாசகம். அவர் அனுபூதியில் பெற்றதைப் பெற்றபடி போற்றிப் பாராட்டுகிருர். கைம்மாறு கேளாத பக்த னுக்குப் பரம்பொருள் தம்மையே கொடுத்து விடுகிருர். ராஜபீடத்தைத் தருவது போன்ற கொடைகளெல்லாம் பலபடிகள் கீழே நிற்கின் றன. உபாசகன் ஒருவனுக்கு அன்னை பரா சக்தி அவன் பரிபாகத்திற்கு ஏற்ற பிரகாரம் சம்மானத்தை எடுத்து வழங்குகின்ருள். ஜீவ போதம் சிறிதளவாவது எஞ்சியிருந்து இம்மை யில் பெரிய ஸ்தானம் வகிக்க எண்ணம்கொண் டுள்ள பக்தனுக்குத் தேவேந்திரனுடைய ஸ்தானத்துக்கு நிகரான பதவிகள் தரப்படு கின்றன. ஆசையை அறவே ஒதுக்கித் தள்ளி விட்டு அம்பிகையின் அருளை மட்டும்நாடிநிற்கும் அன்பர்களுக்கு அவள் கைவல்ய முக்தியைக் கொடுக்கின்ருள். இதற்கு நிகரான கொடை கிடையாது. சுத்த சன்மார்க்கத்தில் செல்லுகிற சாதகன் ஒருவன் தன்னைத் தன் தாயினிடம் ஒப்படைத்துவிட வேண்டும். அப்பொழுது அவள் அவனைத் தன்னில் ஐக்கியப்படுத்துகிற அரிய வரம் தருகின்ருள்.

689. राज्यलक्ष्मी ராஜ்யலக்ஷ்மீ — ராஜ்ய லக்ஷ்மி வடிவத்தில் இருப்பவள் என்பது இதன் பொருள்.

தெய்விக மகிமை வாய்க்கப் பெற்றவனே அரச பதவியைப் பெற வல்லவனகிருன். ஆத லால் தகுதி யாவும் வாய்க்கப்பெற்ற வேந் தனை விஷ்ணுவின் அம்சம் எனக் கருதுவது மரபு. தகுதியே வடிவெடுத்திருந்த யுதிஷ் டிரன் மகாபாரதப் பெரும் போரில் வெற்றி பெற்றுன பிறகு ராஜ்யம் தனக்கு வேண்டாம் என்று அதைத் துறந்தான். 'நீ உனக்குரியவன் அல்லன், மக்களுக்குரியவன்' என்று பாட்டனர் ஆக்ஞாபித்தார். அவர் ஆணையின்படி தர்ம ராஜன் ஆண்டான். அவன் தகுதியை அனு சரித்து ராஜ்ய லக்ஷ்மியின் மகிமைகளனைத்தும் அவன் ஆண்டு வந்த நாட்டில் பொலிவன வாயின. இது தனி மனிதனுடைய வாழ்விலும் வந்தமைகிறது. அம்பிகையின் உபாசகர்கள் இதைக் கருத்தில் கொள்ளுவார்களாக.

---

# ஸத் ஸம்பாஷணை

கேள்வி: (165) *முனிவர்கள் மான்தோல், புலித்தோல் மீது அமர்வதில் ஏதேனும் கருத்துண்டா?*

பழங்காலத்தில் வாழ்ந்து வந்த முனிவர்களும் தபஸ்விகளும் வனத்தில் அகப்பட்ட காய் கனி கிழங்கு வகைகளைப் புசித்து வந்தார்கள். விலங்குகளின் தோல்களையும், மர உரியையும் உடையாகப் பயன்படுத்தினர்கள். மான், புலி முதலிய விலங்குகளின் தோல்கள் அக்காலத்தில் எளிதில் அகப்பட்டன. குளிர் காலங்களில் அவைகள் கதகதப்பாயிருந்தன. கோடைகாலத்தில் அவைகள் குளிர்ந்திருந்தன. அத்தகைய வசதி அவைகளிடத்து அமைந்திருந்ததினுல் அத்தகைய தோல் வகைகளைத் தியானத்தில் அமருகிறவர்கள் எல்லாரும் பயன்படுத்த ஆரம்பித்தனர். நாளடைவில் அப்பழக்கம் ஓர் ஐதிகமாக உருவெடுத்திருக்கிறது. ஆனல் அத்தகைய தோல்களின் மீது அமர்ந்து தியானம் பண்ணவேண்டும் என்னும் நியதியில்லை. பழங்காலத்தில் புலித்தோல், மான்தோல் முதலியன எளிதில் அகப்பட்டன. இக்காலத்தில் உரோமம், பஞ்சு முதலியவைகளைக்கொண்டு நெய்கின்ற கம்பள வகைகளும் ஜமுக்காள வகைகளும் எளிதில் அகப்படுகின்றன. உட்காருவதற்குரிய விரிப்பு எக்காலத்தில் எது எளிதில் அகப்படுகிறதோ அதைப் பயன்படுத்துவது உசிதம். இன்ன விரிப்பின்மீதுதான் அமர்ந்து தியானம் பண்ணவேண்டும் என்னும் நியதியில்லை.

ஆனல் தியானம் பண்ணிப் பழகுகிறவர்கள் வெறும் தரையில் உட்காரலாகாது. கோரைப்பாய், தர்ப்பைப்பாய், ஜமுக்காளத் துண்டு ஆகியவைகளில் எது ஒத்து வருகிறதோ அதை ஆசனமாக அமைத்து அதில் தியானம் பழகுவது அவசியமாகிறது.

கேள்வி: (166) *இறந்தவர்கள் ஏதோ கருவிகள் வாயிலாக நம்மோடு பேசுவதாகக் கூறுகிருர்களே இது சாத்தியமா?*

இறந்தவர்கள் நம்மோடு பேசுகிருர்கள் என்னும் கருத்தை ஒரு மதக்கொள்கைபோன்று பிரச்சாரம் பண்ணி வருகிறவர்கள் சிலர் இருக்கின்றனர். இது வெறும் கற்பனைக் கொள்கை. மரணத்தின் வாயிலாக அன்னவர்கள் நம்மிடத்திருந்து பிரித்தெடுத்து வைக்கப்பட்டிருக்கிருர்கள். ஒரு மரத்தின் பாங்கு முழுதும் அதன் விதையில் ஒடுங்கியிருப்பது போன்று செத்தவர்களுடைய பாங்கு முழுதும் அவர்களுடைய சூட்சும சரீரங்களிலோ காரண சரீரங்களிலோ ஒடுங்கிக் கிடக்கிறது. செத்தவர்கள் ஓய்வில் இருக்கிருர்கள். நம்மோடு பேசுதற்கு ஏற்ற கருவிகரணங்கள் அவர்களிடத்தில் இல்லை. வீணை வாசிக்கிறவனிடமிருந்து வீணையைப் பிரித்து எடுத்துக்கொண்டால் அவன் எப்படி வீணையை வாசிக்க முடியாதோ அப்படிச் செத்தவன் நம்மோடு உரையாடுதற்கான கருவிகரணங்கள் இல்லாதவன் ஆகிருன். அயர்ந்து உறங்குகின்றவனுக்கு நம்மோடு பேச இயலுவதில்லை. பேசினல் அவன் உறங்குபவனல்லன். ரண வைத்தியம் பண்ணுகிறபொழுது மயக்க மருந்து கொடுத்து நாடி நரம்புகளெல்லாம் உணர்ச்சியற்றுப் போகும்படி செய்கிருர்கள். அந்நிலையில் மயங்கியிருக்கிறவர்கள் நம்மோடு பேசுவதில்லை. அத்தகைய நிலையினின்றும் முழுதும் மாறியுள்ள கருவிகரணங்களற்ற நிலைக்குச் செத்தவர்கள் போகிருர்கள். நம்மோடு அவர்கள் பேசுகிருர்கள் என்பதற்கு எந்தச் சாஸ்திரத்திலும் பிரமாணமில்லை. ஆதலால் இக்கொள்கையைப் பொருளற்றது எனப் புறக்கணிப்பது உசிதம்.

கேள்வி (167) *மனிதன் மாறியமைவது கொள்கையை முன்னிட்டா? அல்லது சூழ்நிலையை முன்னிட்டா?*

மனிதன் சதா மாறியமைந்து கொண்டிருக்கின்ருன். அப்படி மாறியமைவதின் வாயிலாக அவன் மேன்மையுறுவதும் உண்டு; கீழ்மையுறுவதும் உண்டு. மனிதன் எந்த விதத்தில் மாறியமைந்தாலும் அதற்கு முகாமையாகக் கொள்கை, சூழ்நிலை ஆகிய இரண்டும் பயன்பட்டு வருகின்றன. மக்களுக்கிடையில் இரட்டையர்கள் பிறப்பது சர்வ சாதாரணம். இரட்டையர்களுக்கு மேற்பட்டு மூன்றுபேர் நான்குபேர் பிறப்பதும் உண்டு. அப்படிப் பிறந்த குழந்தைகளை வெவ்வேறு இடங்களில் பிரித்து வைத்து

வெவ்வேறு கொள்கைகளைப் புகட்டினால் அக் கொள்கைகளுக்கேற்ற மாறுபாடுகள் அக்குழந் தைகளிடத்து இயல்பாகவே அமைகின்றன. இனி சூழ்நிலை என்பது சகவாசம் எனப் பொருள்படுகிறது. நல்லார்களுக்கிடையில் வாழ்ந்து வருவது நல்ல சூழ்நிலையாகிறது. கெட்டவர்களுக்கிடையில் வாழ்ந்து வந்தால் தவிர்க்கமுடியாத கேடு தானே வந்தமைகிறது. மனிதனை மேல் நிலைக்கு எடுப்பதும் கீழ்நிலை யில் வைத்துக் கெடுப்பதும் சாத்தியம். வளர்ந்து வருகிற குழந்தைகளுக்கு எத்தகைய கருத்துக்களை ஊட்டுகின்றோம், எத்தகைய சூழ்நிலைகளில் வளர்த்து வருகின்றோம் ஆகிய இந்த இரண்டு கோட்பாடுகளும் மிக முக்கிய மானவைகளாம்.

ஜன்மக்கூறு என்பது ஒன்று உண்டு. அது முற்பிறப்பில் பெற்றுள்ள சம்ஸ்காரங்களைப் பொறுத்திருக்கிறது. சம்ஸ்காரங்களுக்கேற்ப ஒருவன் நல்ல இயல்புகளோடு பிறக்கிறான். மற்றொருவன் தீய இயல்புகளோடுபிறக்கிறான். புதிதாகப் பெற்றுள்ள பிறவியில் நாள் ஏற ஏற முற்பிறப்பின் பாங்குகள் முன்னணிக்கு வருகின்றன. ஆயினும் நல்ல சூழ்நிலையில் வளர்ந்து வருகின்ற ஜீவாத்மன் ஒருவன் பழைய சம்ஸ்காரங்கள் கெட்டவைகளாக இருந்தாலும் அவைகளைப் பின்னணிக்குத் தள்ளிவிட்டு நல்ல பாங்குடையவனாக வளர்ந்து வருகிறான். ஆதலால் சூழ்நிலை மிக மிக முக் கியமானதாகிறது. அதற்கேற்ப புதிதாகப் பிறந்துள்ள ஜீவாத்மன் ஒருவன் மேலோன் அல்லது கீழோன் ஆகிறான்.

**கேள்வி: (168) மதுரபாவம் என்றால் என்ன?**

பக்தி சாதனத்தில் ஐந்து பாவங்கள் அல் லது ஐந்துவித மனநிலைகள் இருக்கின்றன. கடவுளைஆண்டானாகவைத்துத் தன்னை அடிமை யாக வைத்துக்கொள்ளலாம். இது தாஸ்ய பாவம் எனப்படுகிறது. இதற்கடுத்தபடி வரு வது சகாபாவனை. கடவுளைத் தோழனாகக் கருதுவது இதன் நோக்கம் ஆகும். வாத் சல்யபாவனை என்பது அடுத்தபடி வருகிறது. தெய்வத்தைத் தன் தாயாகவோ தந்தை யாகவோ வைத்துக்கொள்வது இதன் நோக் கம் ஆகும். சாந்தபாவனை என்பது மற்றொன்று. போற்றுதற்குரிய மெய்ப்பொருளாக இலங்கு பவர் தெய்வம். ஆதலால் உள்ளன்போடு அவரைப் போற்றிவருவது சாந்தபாவனை யாகும். மதுரபாவனை என்பது இந்த நான்கு பாவனைகளுக்கும் மேலானது. நாயகன் நாயகி முறையில் இறைவனோடு இணக்கம் பூணுதல் மதுரபாவனையாகும். தெய்வத்தைத் தனக்குத் தலைவனாகவும், அத்தலைவனுக்குரிய தலைவியா கவும் வைத்து பக்தி பூணுவது மதுரபாவம் ஆகும். மதுரபாவத்தை அனுஷ்டிக்கிறவன் ஆண்பாலாக இருந்தாலும் தன்னைப் பெண் பாலாகக் கருதித் தெய்வத்துடன் பேரன்பு பூண்டிருப்பது மதுரபாவம் ஆகும். இத்தகைய பக்தி சாதனத்தில் ஈடுபடுகிறவன் ஜீவர்கள் எல்லாரையும் பெண்பாலர்களாகவே கருது கிறான். தன்னுடைய நாயகனாகிய கடவுள் ஒருவரே ஆண்பால் ஆகிறார். இம்முறையில் மக்கள் எல்லாரையும் தோழிமார்களாகக் கருதுகிறவன் எளிதில் காம நோயை வெல்லு கிறான். சாதகன் தானே ஆண்பால், பெண் பால் என்னும் வேற்றுமையைக் கடந்து அதீத நிலைக்குப் போகிறான்.

இதில் ஒரு சிறப்பு உண்டு. நாயகனும், நாய கியும் பரஸ்பர நட்புப் பூணுகின்றனர். பேரன் பில் அவர்களிடமிருக்கும் ஆண்பால் பெண் பால் உணர்ச்சி அறவே அடிபட்டுப்போகிறது. ஆண்டான் அடிமை பாவத்திலிருக்கும் தொண்டு புரியும் பாங்கு இருவரிடத்திலும் உயர்நிலை எய்தி இருக்கிறது. வேற்றுமைக்கு இடம் தராது இருவரும் ஒருவருக்கொருவர் பணிவிடை செய்துகொள்கின்றனர். வாத் சல்ய பாவனையிலிருக்கும் பெற்றோர் இயல் பும், பிள்ளைப்பேறு அதனிடத்திலிருக்கும் இயல்பும் நாயகன் நாயகியிடத்துத் தலைதூக் கித் திகழுகின்றன. சகாபாவனையை அனு சரித்து இருவரிடத்தும் தோழமை சதா திகழ்ந்துகொண்டு இருக்கிறது. சாந்தபாவ னையை அனுசரித்து நாயகனும் நாயகியும் ஒருவரை ஒருவர் போற்றும் பாங்குடையவர் களாயிருக்கின்றனர். ஆக ஐந்துவித பாவனை களுள் மதுரபாவனை ஒப்பு உயர்வு அற்றதாக மேலோங்கியிருக்கிறது. பக்தர்களுள் யாரோ சிலர்தாம் அப்பெருநிலையை அரிதிலும் அரி தாக வாய்க்கப்பெற்றவர் ஆகிறார்கள்.

# வாசுதேவமனன விளக்கம்

(சுவாமி ஸதானந்தர்)

**கேள்வி:** மனம், வாக்கு, காயம் ஆகிய திரி கரணங்களும் தாமாகவே காரியங்களைச் செய்கின்றனவா? அல்லது வேறு ஒன்றினால் பிரேரணை செய்யப்பட்டு, தூண்டப்பட்டுச் செய்கின்றனவா?

**பதில்:** ராகம் (ஆசை) துவேஷம் (வெறுப்பு) இவைகளினால் தூண்டப்பட்டுச் செய்கின்றனவே அல்லாமல் திரிகரணங்களும் தாமாகச் செய்பவை அல்ல. ராகதுவேஷங்கள் இருந்தால் திரிகரணங்களும் வேலை செய்கின்றன; இல்லாவிடில் வேலை செய்வதில்லை. ராகதுவேஷங்களே கரணங்களைத் தூண்டிவிட்டு வேலை செய்விக்கின்றன என்பது அனுபவ பூர்வமானது.

ध्यायतो विषयान्पुंसः सङ्गस्तेषूपजायते ।
सङ्गात् सञ्जायते कामः कामात्क्रोधोऽभिजायते ॥

பொருள்களை நினைப்பதால் பற்று உண்டாகிறது. பற்று ஆசையாகப் பரிணமிக்கிறது. ஆசை சினமாக வடிவெடுக்கிறது. (கீதை 2-62)

வீதியில் நடந்து போகிற ஒருவன் பல வடிவங்களைப் பார்க்கிறான். அவைகள் கண்ணாடியில் தோன்றி மறைவன போன்று அவன் மனதில் ஒரு பதிவையும் உண்டாக்கவில்லை. அவைகளுக்கிடையில் கட்டழகுள்ள வடிவம் ஒன்று வந்தது. அது அவன் மனதைக் கவர்ந்தது. அதைக் கூர்ந்து பார்க்க விருப்பம் உண்டாயிற்று. வலுத்த விருப்பம் பற்றுதல் எனப்படுகிறது. பிறகு அப்பொருளைத் தனக்குரியது ஆக்கிக்கொள்ள முயலுகிறது. திரிகரணங்களில் மனது சூக்ஷ்மமானது. அது எண்ண மயமாக இருக்கிறது. அதுவே வாக்கையும் சரீரத்தையும் இயக்குகிறது. மனதைக் கட்டுப்படுத்தினால் வாக்கும் சரீரமும் அடங்கும். ஆகையால் மனதை அடக்குதல் முக்கியமானது.

சாஸ்திரங்களில் கடவுள் தத்துவங்களைக் கண்டறிவதில் **அன்வயம், வியதிரேகம்** என்கிற முறையைக் கையாளுகிறார்கள். 'எது இருந்தால் எது இருக்கிறதோ' இது அன்வயம். 'எது இல்லாவிட்டால் எது இல்லையோ' இது வியதிரேகம். 'நெருப்பு இருந்தால் புகை ஏற்படுகிறது' இது அன்வயம். 'நெருப்பு இல்லாவிட்டால் புகை இல்லை.' இது வியதிரேகம். நம் அனுபவத்தில் நெருப்பும் புகையும் இணைபிரியாதவை, ஒன்று மற்றொன்றுக்குக் காரணமாய் இருக்கிறது என்பதை அறிகிறோம். எப்போதும் நீரை அண்டி வாழ்கிற பறவைகளைப் பார்க்கும்போது தண்ணீரைப் பார்க்காமலேயே அண்மையில் குளம், ஏரி ஏதோ ஒன்று இருக்கிறது என்று யூகிக்கிறோம். முகம் வாட்டமுற்று இருக்கிற நண்பனைப் பார்த்து என்ன கவலை? என்று அன்புடன் விசாரிக்கிறோம். அவன் கவலையை நாம் எப்படித் தெரிந்து கொண்டோம்? இவை நமது சொந்த அனுபவங்கள் ஆகும். இந்த அடிப்படையை வைத்துத் தெரியாத உண்மைகளையும் நிர்ணயிக்கிறோம். இம் முறையில் இதுவரை ஆத்மாவுக்குக் கர்த்ருத்வம் இல்லை என்பதை ஆராய்ந்தோம். ஆத்மா அகண்டமானது, நிர்விகாரம், நிஷ்பிரபஞ்சம், ஆதி அந்தமற்றது, நிஷ்கிரியம். ஆகையால் அதற்குக் கர்த்ருத்வம் வராது. கர்த்ருத்வம் இருந்தால் அது ஆத்மா ஆகாது. கிரியையே இல்லாத இடத்தில் கர்த்ருத்வம் எங்ஙனம் வரும்? பாரமார்த்திகசத்தில், பரமாத்மாவிடத்தில், பரப்பிரம்மத்தில், அகண்ட, ஏகவஸ்துவிடத்தில் கர்த்ருத்வம் இல்லை. ஜீவ சொருபத்தில் வியவகாரிகசத்தில் உயிர்களுக்குக் கர்த்ருத்வம் தோன்றுகிறது. அதுவும் வெறும் தோற்றமே, அகங்கார மமகாரத்தினால் உண்டானதே ஆகும். ஜீவனுக்கு என்ன செய்ய இயலும்? அது யந்திரம் போன்று, சூத்திரப்பாவை போன்று ஆட்டுவிக்கப்படுகிறது. ஜீவனது பந்தங்களுக்கு எல்லாம் காரணம் கர்த்ருத்வமே ஆகும். ஆகையால்தான் கீதை பற்றற்றுக் கர்மம் செய், பலனில் விருப்புக் கொள்ளாதே, வினைப்பயன் விளைவிப்பவன் ஆகாதே என்று போதிக்கிறது. ஆத்மா கர்த்ருத்வமற்றது.

**கேள்வி:** நான் கோவிலைக் கட்டுவிக்கிறேன், நான் குளத்தை வெட்டுவிக்கிறேன், நான் பள்ளிக்கூடம் நடாத்துவிக்கிறேன்என்று

வியவகாரங்கள் செய்வதினால் ஆத்மா கர்த்தாவாக (செய்பவனாக) இல்லாவிட்டாலும் காரியத்தைச் செய்விப்பவனாக இருக்கிறது என்று சொல்லலாம் அல்லவா?

பதில்: இல்லை. அப்படிச் சொல்லக் கூடாது. ஆத்மா செயலற்றதாலும் மாறுதல் அற்றதாலும் செய்விக்கும் தன்மையும் அதற்குக் கிடையாது. செய்விக்கும் தன்மையும் செயல்தானே. அதனிடத்தில் செய்விக்கும் தன்மை தோன்றுவது வெறும் தோற்றமாத்திரமே ஆகும். வெண்மையான ஸ்படிக லிங்கத்தின் பக்கம் சிவப்பு நிறமுடைய செம்பரத்தைப் பூவை வைத்தால் பூவின் நிறம் ஸ்படிக லிங்கத்தில் பட்டு அதுவும் சிவப்பு நிறமாகத் தோன்றுகிறது. இந்த உதாரணத்துக்கு ஜபா குஸும நியாயம் என்று பெயர். அருந்ததி நியாயம், சர்ப்பரஜ்ஜு நியாயம் என்பன போன்று வேதாந்தத்தில் ஒன்றின் நிறம், தன்மை, செயல், குணம் மற்றொன்றினதாகத் தோன்றுவதற்கு ஸ்படிகலிங்கம், செம்பரத்தைப்பூ உதாரணங்களாகச் சொல்லப்படுகின்றன. உண்மையில் ஸ்படிக லிங்கம் வெண்மையானது என்றும், பூவினால்தான் அது சிவப்பாகத் தோன்றுகிறது என்றும், பூவை எடுத்துவிட்டால் அது பழையபடி தன் யதார்த்த வெண்மை நிறத்தில் விளங்கும் என்பதும் நமக்கு நன்கு தெரிகிறது. இதேபோன்று ராக துவேஷங்களில் உள்ள செய்விக்கும் தன்மை, அறியாமையால், மயக்கத்தால், ஆத்மாவினுடையதுபோல் தோன்றுகிறது. அது ஆத்மாவின் இயற்கை எனின் அதை நாசம் செய்வதற்கு யாரும் யத்தனம் செய்யமாட்டார்கள். இயற்கை என்பது அதன் சொரூபமாதலால் ஸ்வபாவம் அழிந்தால் ஸ்வரூபமே அழிந்துவிடும். மேலும் ஆத்மாவிற்குச் செய்விக்கும் தன்மை உண்டு என்று ஒப்புக்கொண்டால் "ஆத்மா பற்றற்றது, செய்கை அற்றது, செய்விக்கும் தன்மையும் அற்றது" என்கிற வேத வாக்கியங்கள் பொய்யாகிவிடும். செய்விக்கும் தன்மை என்பது ஆத்மாவில் முன்னால் இல்லாமல் புதிதாக உண்டானதாகச் சொன்னால் அதனால் ஏற்படும் முக்தியும் புதிதாக ஏற்பட்டதாக ஆகிவிடும். உண்டாகும் வஸ்து அழியக் கூடியதாகையால் முக்தியும் ஒரு காலத்தில் இல்லாது போய்விடும். ஆத்மாவில் செய்விக்கும் தன்மை இருந்தால் அது சுஷுப்தியில் ஏன் தெரியவில்லை, செயல்படவில்லை? இக்காரணங்களால் ஆத்மாவுக்குச் செய்விக்கும் தன்மை இயற்கையாக உள்ளது அன்று. ராக துவேஷங்களில் உள்ள செய்விக்கும் தன்மை பிராந்தியால் ஆத்மாவில் இருப்பதாக எண்ணுகிறார்கள்.

கேள்வி: சுஷுப்தியில் ஆத்மாவுக்குச் செய்விக்கும் தன்மை தெரிவதில்லை, ஆகையால் ஆத்மாவுக்குச் செய்விக்கும் தன்மை இல்லை என்கிற வாதம், நியாயமன்று, சரியன்று என்று தோன்றுகிறது. அதை விளக்க ஒரு உதாரணம் சொல்லலாம். ஆசிரியருக்குச் சொல்லிக்கொடுக்கும் சக்தி இருக்கிறது. மாணவர்களுக்கு அவர் போதிக்கிறார். ஆனால் படிக்கும் மாணவர்கள் இல்லாதபோது அவர் சொல்லித் தருவதில்லை. அவருடைய போதனை சக்தி வெளியில் தெரிவதில்லை. அதேபோல சுஷுப்தியில் மனம் வாக்கு காயம் இவைகளின் சேர்க்கை இல்லாததால் ஆத்மாவின் செய்விக்கும் தன்மை இருந்தும் அது காணப்படவில்லை. விழிப்பு, சொப்பனவஸ்தை இவைகளில் இக்கரணங்களின் சேர்க்கை இருப்பதால் இந்தச் சக்தி வெளிப்படத் தெரிகிறது. இப்படி ஏன் கருதலாகாது?

பதில்: விழிப்பு நிலையிலும் ஒரு வேலையும் செய்யாமல் சும்மா இருக்கிற வேளைகள் உண்டு. அவ்வேளைகளில் ஆத்மாவின் செய்விக்கும் தன்மை என்ன ஆகிறது? ஸ்ரீ ரமண மஹரிஷி தம் ஆசனத்தில் வீற்றிருப்பார், கண் விழித்திருக்கும்; ஆனால் அவர் முன்னே யார் வருகிறார், யார் போகிறார் என்பது அவருக்குத் தெரியாது. வருகிறவர்கள் என்ன செய்கிறார்கள், என்ன பேசுகிறார்கள், என்ன கேட்கிறார்கள் என்பதும் அவருக்குத் தெரியாது. புகழ்ந்தாலும் தூற்றினாலும் அவருக்குத் தெரியாது. ஒரு பேச்சுப் பேசமாட்டார். அவருடைய திரிகரணங்களும் செயலற்றுச் சும்மா இருக்கும். ஆத்மாவின் நிஜநிலை அது. அதில் அவர் லயித்துவிட்டபடியால் அவர் அங்ஙனம் இருக்கிறார். ஆத்மாவுக்குச் செய்விக்கும் தன்மையும் இல்லை. கொல்லன் உலையில் இரும்பைப் போட்டுப் பழுக்கக் காய்ச்சுகிறான். உலை

நெருப்புடன் இரும்பு சேர்ந்திருப்பதால் இரும்பில் உள்ள நீளம், குட்டை என்கிற தன்மைகளைப் நெருப்புப் பெற்றது போன்று தோன்றுகிறது. அக்னியின் உஷ்ணம், பிரகாசம் ஆகிய தன்மைகளை இரும்பு பெற்றுள்ளது போன்றும் தோன்றுகிறது. அதேபோன்று அக்ஞானத்தால் ராகதுவேஷம் இவைகளில் உள்ள செய்விக்கும் தன்மை ஆத்மாவில் உள்ளது போலவும், ஆத்மாவின் செயலற்ற தன்மை ராகதுவேஷங்களில் இருப்பது போலவும் தோன்றுகிறது.

**கேள்வி :** ராகதுவேஷங்கள் அசேதனம், ஜடமானவை. அசேதனத்துக்குச் செய்விக்கும் தன்மை எப்படி வரும்? ஒரு குடம் மற்றொரு குடத்தைச் செய்விக்காது அல்லவா?

**பதில் :** ஆம், அது உண்மையே. ஆயினும் அதற்கு வேண்டிய யோக்கியதைச் சில இடங்களில் இருப்பதால் தூண்டுதல் செய்கிறது. சில இடங்களில் அந்த யோக்கியதாம்சம் இல்லாததால் தூண்டுதல் செய்வதில்லை. எப்படியெனில் அக்னி ஜடமானது. ஆனாலும் கந்தகத்துடன் கூடிய கரித்தூளுடன் (வெடி மருந்துடன்) சேர்ந்து பெரிய இரும்புக் குழாயில் (பீரங்கியில்) இருக்கும் கற்களையும் இரும்புக் குண்டுகளையும் உந்தித் தள்ளி தூரத்தில் இருக்கும் சதுரங்கசேனையையும் அழிக்கிறது. இது போன்று ராகதுவேஷங்கள் அசேதனமாக இருந்த போதிலும் செய்விக்கும் தன்மை உடையவை. அப்படியானால் 'ஆத்மா இந்திரியங்களை அடக்கி ஆளுபவன், எல்லாவற்றிலும் உள்ளிருந்து நடத்துபவன்' என்கிற சுருதி வாக்கியங்களை எப்படி அர்த்தம் பண்ணுவது என்கிற கேள்வி வருகிறது. அதில் தெளிவாக எல்லாவற்றையும் செயலில் தூண்டுபவன், செயல்படுத்துபவன் என்கிற பொருள்படவே இருக்கிறது. ஆயினும் அதன் தாத்பரியம் வேறு. சூரியனைப் போல அருகில் இருப்பதாலேயே, சன்னிதி மாத்திரத்தினாலேயே எல்லாக் காரியங்களும் நிகழ்வதற்கு அனுகூலனாய் இருக்கிறான் என்று பொருள் ஆகும்.

**கேள்வி :** ஆத்மா அருகில் இருப்பதனால் எல்லாப் பிராணிகளும் காரியங்களைச் செய்கின்றன என்று ஒத்துக்கொண்டால் அப்படி நடத்தப்படும் புண்ணிய பாப கர்மங்களுக்கும் அதன் பலன்களுக்கும் ஆத்மா பாத்தியப்பட்டது ஆகாதா?

**பதில் :** அப்படி அன்று. சூரியனது வெளிச்சத்தினால்தான் எல்லா ஜீவராசிகளும் நடமாடுகின்றன, செயல்கள் புரிகின்றன, வாழ்கின்றன. ஜீவர்களின் வாழ்வுக்குச் சூரியன் காரணம் ஆகிறான். ஆயினும் ஜீவர்களின் பாப புண்ணியங்கள் சூரியனைச் சார்வதில்லை. விளக்கு வெளிச்சத்தில் ஒருவன் பாகவதம் படிக்கிறான்; மற்றொருவன் பொய்ப் பத்திரம் தயாரிக்கிறான். இரண்டின் புண்ணிய பாபங்கள் விளக்கைச் சேரா. அதேபோல ஆத்ம சைதன்யத்தினால்தான், ஆத்மாவின் சாந்நித்தியத்தினால்தான் ஜீவர்கள் இப்பிரபஞ்சத்தை அறிகிறார்கள், அனுபவிக்கிறார்கள். ஜீவர்களின் பாப புண்ணியங்கள் ஆத்மாவை எட்டமாட்டா, மாசுபடுத்த மாட்டா. காந்தமானது ஒரு செயலும் செய்யாமல் தனது சந்நிதி மாத்திரத்தால் இரும்பைத் தன்பால் கவர்ந்திழுக்கிறது. இரும்பு நகர்ந்து காந்தத்தில் வந்து ஒட்டிக்கொள்வதற்குக் காந்தம் காரணமானாலும் அது ஒரு அசைவும் இன்றி தன் நிலையில் இருக்கிறது. இது போலவே பிராணிகளின் கர்மாக்கள் ஆத்மாவை ஒட்டுவதில்லை. ஆத்மா குற்றமற்றது, மாசற்றது, மாறுபாடில்லாதது, அனைத்துக்கும் ஆதாரமாய் இருப்பது ஆகிய தன்மைகள், சொரூப லக்ஷணம் ராகதுவேஷாதிகளினால் பாதிக்கப்படமாட்டாது. இதுவே முடிவானது, நிச்சயம்.

ஜீவபோதம் தலையெடுத்துச் செயலுக்குத் தான் கர்த்தா என்று அங்கீகரிக்கும் ஜீவனையே பாப புண்ணியங்கள் பற்றுகின்றன. ஜீவபோதம் தலையெடுக்காத ஜீவன்களையும், ஜீவபோதத்தைக் கடந்து பரபோதம் பெற்ற ஜீவன்களையும், செயலுக்குக் கர்த்ருத்வம் பாராட்டாத ஜீவன்களையும் பாப புண்ணியங்கள் பற்றுவதில்லை. குழந்தைகளிடத்துக் கர்த்ருத்வம் இல்லை. ஆகையால் அவைகளுக்குப் பாப புண்ணியங்கள் இல்லை. ஞானி ஜீவபோதத்தைக் கடந்த நிலையில் இருக்கின்றான். அவன் செயலுக்குத் தன்னைக் கர்த்தாவென்று கருதுவதில்லை. ஆகையால் அவனையும் பாப புண்ணியங்கள் பற்றுவதில்லை.

# அவர் யார் ?

"வாழ்வாவது மாயம்; இது மண்ணாவது திண்ணம்" என்னும் முதுரையை அனேக தடவை படிக்கின்றோம்; கேட்கின்றோம். ஆனால் அதைப் பற்றிச் சிந்தித்து வாழ்வைப் பற்றிய ரகசியத்தை அறிந்துகொள்பவர் யார்? வாழ்க்கையில் துன்பத்துக்குமேல் துன்பம் வந்தாலும் மேலும் வாழ்வு இன்பமயமானது என்று எண்ணி வாழ்க்கையை வீணாக்குகின்றார்கள் மக்கள். பிறந்தது முதல் துன்பத்துக்கே வழியில்லாது இன்பச் சூழ்நிலையில் ராஜபோகத்தில் இருக்கும் ஒருவர் வாழ்வாவது மாயம்; இது மண்ணாவது திண்ணம்; என்ற கோட்பாட்டை மனதில் வாங்கிக்கொள்வாரா? கணம் கொண்டு சுற்றத்தார் அலறப் பிணங்கொண்டு காட்டுய்ப்பார்கண்டும் மனம் கொண்டு இவ்வுலக வாழ்க்கையில் பற்றுக் கொண்டு வாழும் மக்கள் வாழ்வின் ரகசியத்தை அறிவதெப்படி? துன்பத்தை மறைத்து இன்பச் சூழ்நிலை ஏற்படுத்தித் தன் இளம் குமாரனை அச்சூழ்நிலையில் வளர்த்து வந்தான் அரசன் ஒருவன். அம்முயற்சியை மீறி முதுமை அடைந்த மனிதன், நோய்வாய்ப்பட்ட மனிதன், பிணமான மனிதன், துறவி மனிதன் ஆகிய நால்வருடைய காட்சியைக் கண்டு வாழ்வின் மர்மத்தை அறிய மா துறவு பூண்ட இளவரசன் யார்? அவர்தாம் பெருங்கருணையும், தியாகமும், ஞானமும், வீரமும் உருக்கொண்டு வந்த, உலகை உய்வித்த உத்தமன் புத்தர் ஆவார்.

எனக்கு எனக்கு என்று வாழும் கணக்கிலடங்காத சுயநலமிகளை நாள்தோறும் நாம் காண்கின்றோம். 'என் வாழ்வு உயிர்களின்நலனுக்கே' என்று உருகுகின்ற உள்ளம் படைத்த கருணாமூர்த்திகளைக் காண்பதல்லவோ காட்சி! அத்தகைய கருணாமூர்த்தி மானுட வடிவெடுத்து வந்தால் எப்படி நடந்துகொள்வாரென்பதைக் காட்டின மகான் யார்? சக்கரவாகப் பறவைக்காக உளம் துடித்து அப்பறவையைக் காப்பாற்றி அதற்கு வாழ்வு கொடுத்தார் ஓர் உத்தமர். மக்களின் துயரம் கண்டு, மக்களின் துயரைப் போக்க அரச வாழ்வைத் துறந்த அன்புகொண்ட உள்ளம் படைத்தவர் யார்? ஆட்டின் குட்டிக்காக அனுதாபப்பட்டு அக்குட்டியைத் தோள்மீது சுமந்து கொண்டு சென்று வாயில்லா ஜீவர்கட்காகத் தம் வாழ்வையே கொடுத்து அவைகளைப் பிம்பிசாரன் யாகத்திலிருந்து காப்பாற்றிய பெருமகன் யார்? அவர்தாம் கருணாமூர்த்தி புத்தர்.

காந்தம் இரும்பை இழுப்பதுபோன்று விவேகானந்த யோகியின் உள்ளத்தைத் தம்பால் இழுத்து விவேகானந்தருடைய உள்ளத்தைக் கொள்ளைகொண்ட யோகி யார்? இரண்டாயிரத்தைந்நூறு ஆண்டுகட்கு முன்பு கர்மகாண்டம் தலையெடுத்து, கர்மகாண்டத்தின் பெயரால் உயிர்ப்பலி நிகழ்ந்து வந்ததைத் தடுத்து ஞான காண்டத்தை நிறுவிய கர்மயோகி யார்? அவர்தாம் மகாயோகி புத்தர்!

'மோகத்தைக் கொன்று விடு; அல்லால் என் மூச்சை நிறுத்திவிடு' என்று மகாகவி பாரதியார் கவிதையில் முழங்கினர். மோக வலையில் வசப்படாதவர்கள் யாருமில்லை. மோகவலையில் சிக்குண்டு அறிவை இழந்து அவதிப்படும் மக்களை இப்பூவுலகில் காண்கின்றோம். பெண்ணாசைப் பிணிப்பு பெரும் பிணிப்பு. அதிலிருந்து விடுபடுபவர்கள் அருமையிலும் அருமை. காமத்துக்கு வசப்பட்டுக் காரிகையர் கட்டழகில் மூழ்கிக் கருத்தழிந்து போகின்றவர்கள்தாம் பெரும்பாலோர் ஆவார்கள். சிந்தனையைத் தெளிவாக்கிச் சிற்றின்பம் அருவருப்புக்குரியதெனத் தீர்மானித்துச் சிந்தனையை மேலானதாகத் திருத்தியமைத்த மக்கள் சிறப்புக்குரியவர்களாகிறார்கள். காலமெல்லாம் காமத்துக்கு வசப்பட்டு வாழ்க்கையைக் கழிப்பவர்கள் சாதாரண மக்கள். அவர்களுக்கு மேலாம் வாழ்வைப் பற்றிய மேன்மை விளங்குவதில்லை. 'கண்டதே காட்சி கொண்டதே கோலம்' என்று புலனின்பமே சாசுவதமானதென்ற கருத்துடையவர்களாக வாழ்ந்து இன்பதுன்பத்துக்கு ஆளாகின்றனர். மின்னல் தோன்றி மறைவது போன்று மோக வலையில் அகப்பட்டவர் போன்று சிறிது காலம் உலக வாழ்வு வாழ்ந்து பிறகு அதை அறவே ஒதுக்கிவிட்டு மேலாம் வாழ்க்கையில் திண்ணிய உள்ளம் படைத்தவராகத் திகழ்ந்த வீரர் யார்? அவர்தாம் மாவீரர் புத்தர்!

நல்லநேரம் பார்த்துக் காரியத்தைத் துவங்க வேண்டுமென்று நல்லநேரத்தைப் பஞ்சாங்கத்தில் தேடிக்கொண்டிருப்பவர்கள் நல்லதைப் புற உலகத்தில் தேடுபவர்களாகிறர்கள். நம்மை நல்லவர்களாக்கும் போது நல்லகாலம் நம்மைத் தேடிக்கொண்டு வருகிறது. நல்லவர்கள் நல்ல காலத்தைத் தேடிப் போவதில்லை. நல்லகாலம் அவர்களைத் தேடிக்கொண்டு வருகிறது. நல்லவர் ஒருவர் எப்பொழுது பிறப்பாரென்று வைகாசிப் பௌர்ணமி காத்துக் கொண்டிருந்தது. நல்லவர் ஒருவர் ஞானத்துக்குத் தகுதியுடையவராக எப்பொழுது ஆவாரென்று வைகாசிப் பௌர்ணமி காத்துக் கொண்டிருந்தது. நல்லவர் ஒருவர் எப்பொழுது மகாசமாதி அடைவாரென்று வைகாசிப் பௌர்ணமி காத்துக்கொண்டிருந்தது. உடல் தோற்றம் நமக்கு ஒரு பிறப்பு. அதை உடல் பிறவி என்கின்றேம். ஞானேதையம் உண்டாகிற பொழுது நாம் ஞானப்பிறவி எடுக்கின்றேம். உடலையும், உள்ளத்தையும்உதறித் தள்ளிவிட்டுச் சச்சிதானந்தத்தில் மகா நிர்வாண நிலையை அடைவது பிறப்பற்ற நிலையாகிறது. அசோக மரத்தடியில் வைகாசிப் பௌர்ணமியன்று உடல் பிறப்பெடுத்த உத்தமர் யார்? வைகாசிப் பௌர்ணமியன்று அரசமரத்தடியில் போதிசத்வம் அடைந்த மகான் யார்? வைகாசிப் பௌர்ணமியன்று சாலமரத்தடியில் மகா நிர்வாணமடைந்த மகாயோகி யார்? அவர்தாம் புத்தர்!

ஆண்டுதோறும் வைகாசிப் பௌர்ணமி வருகிறது. அது மகாப்புனித நாள். ஒருமகான் தோன்றியதும், ஞானம் பெற்றதும், மகாநிர்வாணம் அடைந்ததும் அந்தநாள்என்றல் அதன் மகத்துவத்தை என்னென்பது! ஸ்ரீராமகிருஷ்ணர் காசியில் திரைலிங்கசுவாமி என்ற மகானைச் சந்தித்தார். அவர் பெருமையை அறிந்ததும் அவரால் காசிக்கே தனிமகத்துவம் வந்திருக்கிறதென்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் பகர்ந்திருக்கின்றர். புத்தரினல் வைகாசிப் பௌர்ணமிக்கே தனி மகத்துவம் வந்துள்ளது என்று பகரலாம். அப்புனித நாளில் மகான் புத்தரைச் சிந்தித்து நாமும் போதிசத்வம் அடைய முயல்வோமாக.

உரனென்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து

என்பது குறள். மன உறுதி படைத்தவர்கள் வாழ்க்கையில் வெற்றி அடைகிறர்கள். புலனடக்கம் பழகித் தூய்மையைக் கடைப்பிடிப்பவர்களுக்கே மன உறுதி உண்டாகிறது. கயை என்னுமிடத்தில் அரசமரத்தடியில் அமர்ந்து, "இங்கு இந்த ஆசனத்தின் மீது என் உடல் உலர்ந்து போகட்டும், தோல் காய்ந்து போகட்டும், ஊன் உரு இழக்கட்டும், எலும்பு பொடியாகட்டும், பல பிறவிகளில் பெறுதற்கரிய போதம் பெறும் முன்பு இந்த ஆசனத்தினின்று என் உடல் அசையாதிருக்கட்டும்" என்று மாற்றறியாத் திண்ணிய தீர்மானம் செய்து வார்த்து வைத்த விக்ரஹம் போன்று அமர்ந்திருந்து ஞான வீரராய் விளங்கிய மகான் யார்? அவர்தாம் மாவீரர் புத்தர்!

"மாரா! உன்னை நான் அறிவேன், நீ சோம்பேறிகளுடைய தோழன். உனது படை வலிவு எனக்குத் தெரியும், காமம், பொருளாசை, குரோதம், பகை, பசி, தாகம் ஆகிய புன்மைகளைக் கையாண்டு நீ ஆட்சிபுரிகின்றய். உன்னுடைய ஆட்சியை மனபரிபாகம் அடையப்பெருத மக்களிடம் செலுத்து. என் மனத்தகத்து உனக்கு இடமில்லை ஒழிந்துபோ" என்று வீரத்துடன் மாரனை எதிர்த்து விரட்டியோட்டி ஞானம்பெற்ற மாவீரர் யார்? அவர்தாம் மாமுனிவர் புத்தர்!

சமத்துவம் யோக உச்யதே— சம நிலையே யோகமென்று பகரப்பெற்றிருக்கிறது. உடலை யோக நிலையில் வைத்திருக்கவேண்டும். உள்ளத்தையும் யோகநிலையில் வைத்திருக்கவேண்டும். உடலையும், உள்ளத்தையும் யோகநிலையில் வைத்திருக்கப் பலருக்குத் தெரிவதில்லை.

'உடம்பார் அழியின் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தேன்
உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே'

என்கின்றர் திருமூலர். சுக போகத்தில் உடம்பை ஈடுபடுத்தி உடம்பைப் பலர் கெடுத்து விடுகின்றனர். உடம்பைத் துன்புறுத்திச் சிலர் அதைச் சக்தியற்றதாக்கி விடுகின்றனர். கழிபேருவகையுடையவர்களாகி அதில் உள்ளத்தை மூழ்கடித்து உள்ளத்தைக் கெடுத்து விடுகின்றனர். உள்ளத்தில் துயரத்தை வளர்ப்பது சிலர் யோகம் என்று

கருதுகின்றனர். உடலையும், உள்ளத்தையும் நடுநிலையில் வைத்திருப்பவர்களே திடம்பட மெய்ஞ்ஞானம் பெறுகின்றார்கள். இவ்வுண்மையை வழிப்போக்கர்கள் வீணையைக் குறித்துப் பாடிய பாடல் மூலமாக அறிந்து தம் வாழ்வை யோக வாழ்வாக மாற்றிய புத்திமான் யார்? அவர்தாம் போதி சத்துவமடைந்த புத்தர் ஆவார்!

ஆசையும் அஞ்ஞானமும் துன்பத்துக்குக் காரணம். ஆசை மனிதனை மயக்குகிறது. அஞ்ஞானம் உண்மையை மறைக்கின்றது.மயக்கம் தெளிந்தால் துன்பம் இல்லை. உண்மையை அறிந்தால் துன்பம் இல்லை. இவ்வுண்மையை மக்களுக்குத் தெளிவுபட விளக்குபவர்களைக் காண்பது அரிது. ஆசையை ஊட்டி மக்களை மயக்குவதும், அறியாமையின்கண் மக்களை இழுத்துச் செல்வதும் மதபோதகர்களுடைய போக்காக இருக்கிறது. மதம் என்றால் நம்முடைய வாழ்க்கைக்குப் புறம்பானது என்று எண்ணுகின்றவர்கள்தாம் இருக்கின்றனர். மதமே வாழ்க்கை, வாழ்க்கையே மதம் என்பதை அறிந்து கொள்பவர்கள் மிகச் சிலரே. போகத்துக்குப் பயன்படும் பொருளைப் பெறுவதும் பொருளுக்கு முக்கியத்துவம் கொடுப்பதும், செத்தவர்களை எழுப்புவதும் மத அனுஷ்டானம் என்று எண்ணுகின்றவர்கள் இருக்கின்றனர். சுஜாதை என்ற பெண்ணொருத்தி பிள்ளைப் பற்று உடையவளாக இருந்தாள். அவளுக்கு ஓர் ஆண் குழந்தை இருந்தது. அதை அவள் தன் உயிர் போன்று நேசித்து வந்தாள். அக்குழந்தை திடீரென்று மாரடைப்பால் காலமாகிவிட்டது. தாங்க முடியாத துயரத்துக்கு ஆளானாள். செத்த குழந்தையை எழுப்பும் திறனுடைய ஒருவரைத் தேடிக்கொண்டு சென்று அவரைக் கண்டு பிடித்து அவருடைய காலடியில் குழந்தையை வைத்துத் தேம்பித் தேம்பி அழுதாள். குழந்தைக்கு உயிர் கொடுப்பதாகக் கூறி மந்திரிப்பதற்குக் கடுகு வேண்டுமென்றும், அக்கடுகை யாருமே சாகாத வீட்டிலிருந்து வாங்கி வர வேண்டுமென்றும் கூறினர். அப்பெண் மிக விரைவில் கடுகு கொண்டுவருவதாகக் கூறிப் பல வீடுகளில் கடுகு கேட்டு மரணம் என்பது யாவர்க்கும் பொது என்ற உண்மையை அறிந்து ஞானம் பெற்றாள். உடலுக்குத்தான் அழிவே யொழிய உண்மை சொருபத்துக்கு அழிவில்லை என்பதை அப்பெண்ணுக்கு அனுபவ மூலமாக விளக்கிக் காட்டி அப்பெண்ணின் துயரைத் துடைத்த ஞானமூர்த்தி யார்? அவர்தாம் சித்த புருஷர் புத்தபெருமான்!

கடவுளின் பெயரால் கர்மகாண்டத்தை வளர்த்து மக்களிடையே குருட்டு நம்பிக்கையை வளர்த்த கூட்டத்தை ஒடுக்குவதற்குக் கடவுளைப் பற்றிய பேச்சையே எடுக்காது பரிபூரணநிலையை அடையலாமென்று உலகுக்குப் போதித்த உத்தமர் யார்? அவர்தாம் உண்மை போதகர் புத்தர்!

ஜீவன் இம்மானுடப் பிறவியிலேயே பரிபூரண நிலையை எட்டி விடலாம் என்று உலகுக்கு நிருபித்துக்காட்டிய புருஷர் யார்? அவர்தாம் ஒன்பதாவது அவதார புருஷராகிய புத்தர்!

மனிதன் நிறைநிலையைப் பற்றிப் பிரமாதமாகப் பேசுகின்றான். அத்தகைய பேச்சு நிறைநிலையை அடைவதற்கு உதவாது. கிளிக்குத் தத்துவம் சொல்லிக் கொடுத்தால் அது தத்துவம் பேசும். ஆனால் அது நிறைநிலையை அடைய முடியாது. நிறைநிலையை அடைவதற்கு மனிதன் சுயநலத்தை அறவே துடைத்துத் தள்ளவேண்டும். பேர், புகழ் பெற வேண்டுமென்றோ, சுகம் பெற வேண்டுமென்றோ கருதிச் செய்யும் செயல்கள் பரிபூரண நிலைக்கு நம்மை எடுத்துச் செல்லா. எவ்விதப் பயனையும் கருதாது கர்மம் செய்கின்ற கர்மயோகி எளிதில் பரிபூரண நிலையை எட்டிவிடுகின்றான். தனக்கென வாழாது, தன் துயரைத் துடைப்பதற்கெனத் துறவாது, உலக மக்களுக்காக வாழ்ந்து, உலக மக்களின் துயரைத் துடைப்பதற்காகத் துறவு பூண்டு, கர்மயோகி பரிபூரண நிலையை அடைகின்றான் என்பதை உலகுக்குக் காட்டிய கர்மயோகி யார்? அவர் தாம் கர்மயோகி புத்தர்!

கருணை உள்ளம் உடையவராகவும், கர்மயோகியாகவும், உலகை உய்விக்க வந்த உத்தமராகவும், தர்ம சக்கரத்தைக் காசியில் சுழல வைத்தவராகவும், மனைவியையும், மகனையும் அருள் வட்டத்தில் சேர்த்தவராகவும் விளங்கும் மாவீரர் புத்தரின் திருவடிகளைப் போற்றித் திவ்யானந்தம் பெறுவோமாக!

# உண்மையான வைஷ்ணவன் யார்?

(சுவாமி துருவானந்தர்)

திருநீறணிந்து உருத்திராட்சம் சூடி ஆகம விதிப்படி பூஜை பண்ணுபவர்களைச்சிவபக்தர் கள் என்கின்றோம். திருமண் அணிந்து, துளசி மாலை சூடும் பக்தர்களை வைஷ்ணவர்கள் என் கின்றோம். ஒவ்வொரு மதத்தையும் பிரித்துக் காட்டுவது அவரவர் அணிகின்ற சின்னமே. வெறும் மதச் சின்னங்களை அணிவதால் மட் டும் அவர்கள் தங்கள் மதக்கொள்கைகளைக் கடைப்பிடிக்கிறார்கள் என்று சொல்லிவிட முடியாது. மதச்சின்னங்கள் எதுவுமணியாது புறச் சடங்குகள் எதுவுமில்லாத பலர்நன்னெறி கடைப்பிடிப்பதை நாடெங்கும் காணலாம். சமயச் சின்னங்கள் அணிவதை மூடநம்பிக்கை என்று அறவே ஒதுக்கிவிட முடியாது. அந் தச் சின்னங்களின் உட்கருத்தை அறிந்து உடலில் அணியவேண்டும். அங்ஙனம் அதன் அர்த்தம் தெரியாது தினமும் யந்திரம் செய் வது போன்று உடலில் சைவ, வைஷ்ணவ சின்னங்களை அணிவது வெறும் அர்த்தமில் லாத சடங்காகவே போய் முடியும். இதனால் தனக்கோ மற்றவர்களுக்கோ எந்தவித நன்மை யும்கிடையாது. 'காடுடைய சுடலைப்பொடிபூசி' என்று பாடுகிறார் சம்பந்தர். தினமும் விபூதி அணியும் பக்தர்கள் அதை எடுத்து நெற்றியில் இடுவதற்கு முன் இங்ஙனம் சங்கல்பித்துக் கொள்ளவேண்டும். "இந்த உடல் என்றாவது ஒருநாளைக்கு வெந்து சாம்பலாகப் போவது உறுதி. ஏமனமே! இதில் வைத்துள்ள பற்று தலை விட்டுவிடு" என்று எண்ண வேண்டும். எதை எரித்தாலும் இறுதியில் எஞ்சுவது சாம் பல்தான். இனி அந்தச்சாம்பலை எவ்வளவுதான் எரிக்க முயன்றாலும் முடியாது. அங்ஙனம் எது அழிந்தாலும் இறுதியில் எது அழியாது இருக்குமோ அதுதான் சிவம். அவனே நமக்கு இன்றைக்கும் என்றைக்கும் ஒரே துணை என்று நம்பி, அதன்படி வாழவேண்டும். வைஷ்ணவனும் திருமண் அணியும்பொழுது "இந்தப் பாழும் உடல் ஒருநாளைக்கு மண்ணா கப் போகிறது" என்ற பாவனையில் அணிய வேண்டும். எந்தச் சமயத்தைச் சேர்ந்தவர் என்பதோ, என்ன சின்னத்தை அணிகிறார்கள் என்பதோ முக்கியம் அல்ல. எத்தகைய வாழ்க்கை வாழுகிறார்கள் என்பதே முக்கிய மானது. இதை மனதில் கொண்டுதான் திருநாவுக்கரசர் நாயனாரும்

"ஆவுரித்துத் தின்று உழலும் புலையரேனும்
கங்கைவார் சடைக் கரந்தார்க்கு அன்பராகில்
அவர்கண்டீர் நாம் வணங்கும் கடவுளாரே."

என்றார்.

கிருஷ்ண கிஷோர் என்பவர் ஒரு வைஷ்ண வர். ஒரு நாள் பிருந்தாவனம் வந்தபொழுது அவருக்கு நீர்வேட்கை உண்டாயிற்று. வழி யில் நீர் இறைத்த ஒரு பாமர மனிதனிடம் நீர் தரும்படி கேட்டார். அவன் தன்னை ஒரு தாழ்ந்த ஜாதிக்காரன் என்று கூறித் தன் னிடம் நீர் வாங்கிச் சாப்பிடலாகாது என்று விண்ணப்பித்தான். வைஷ்ணவ பக்த ராகிய அவர் அவனிடம் 'சிவநாமத்தை உச்சரித்துக் கொண்டு நீர் இறைத்துக் கொடு. அது புனிதமாகிவிடும் என்றார். அவ னும் மகிழ்ச்சியோடு அங்ஙனம் செய்து அவரை அனுப்பி வைத்தான். வைஷ்ணவ அந் தணராகிய அவர் கீழ்க் குலத்தவன் என்று அவனைப் பேதம் பாராட்டாது இருந்தும் சிவ நாமத்தில் வைத்த விசுவாசம் அவரிடம் சமய வேறுபாடு இல்லாதிருந்ததைச் சுட்டிக்காட்டு கிறது. சென்னையில் ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம் சரின் பக்தர்களில் ஒருவரின் தாய் பழுத்த, தீவிரமான, ஆசாரமான வைஷ்ணவர். ஒரு நாள் அவ்வம்மையார் தன் வீட்டின் கூரையில் வெயிலில் காயப்போட்ட வற்றல், வடகம் போன்ற உணவுப் பொருள்களை எடுத்துக் கொண்டிருந்தார். அந்த நேரத்தில் பக்கத்து வீட்டுத் தென்னை மரத்திலிருந்து ஒருவன் இந்த அம்மை செய்வதைத் தற்செயலாகப் பார்த்தான். அவ்வளவுதான்! மரத்தில் இருந் தவன் அந்த உணவுப் பொருளைப் பார்த்த காட்சி அந்த அம்மையின் கண்ணில் பட்டதோ இல்லையோ 'ஐயோ இதை ஒரு சூத்திரன் பார்த்து விட்டானே என்று சப்தமிட்டு அவ் வற்றல், வடகம் முதலியவைகளை எடுத்துக் குப்பைத் தொட்டியில் கொட்டினார். தாழ்ந்த

ஜாதிக்காரன் பார்த்ததால் அவ்வுணவுப் பொருள் தீட்டுப்பட்டு விட்டதாம். இப்படிப் பட்ட மனப்பான்மை உள்ளவர்கள் வெறும் சமயச் சின்னங்களை மட்டும் அணிந்து தங்களைச் சைவர் என்றோ, வைஷ்ணவர் என்றோ பகர்ந் தால் அது வெறும் கேலிக் கூத்தாகத்தான் முடியும். ஜாதியையும், சமயச் சின்னங்களையும் பின்னணியில் தள்ளி விட்டு மனபரிபாகத் திற்கே முதலிடம் தரவேண்டும். அவ்வாறு அதற்கு முதலிடம் தந்தவர்களில் ஸ்ரீ ராம கிருஷ்ண பரமஹம்சர், சுவாமி விவேகானந்தர், சாரதா தேவியார், மகாத்மா காந்தி, சுவாமி சிவானந்தர் போன்றோர் மிக முக்கியமான வர்கள்.

ஒருவன் தர்மத்தை அனுசரித்து நல்வாழ்வு வாழ்ந்து, உள்ளத்தால் பொய்யாது ஒழுகினல் உலகத்தாரின் உள்ளத்தில் எல்லாம் அவன் மறையாது வாழ்வான். நம் காலத்தில் வாழ்ந்து, கற்றதை வாழ்க்கையில் கொண்டு வந்து காட்டியவர் காந்தியடிகள். பகவத்கீதை யைத் தாயைப் போலப் போற்றியவர். அதில் இரண்டாம் அத்தியாயம் சாங்கிய யோகத் தில் உள்ள 54-வது சுலோகம் முதல் 72-வது சுலோகம் வரையான 19 சுலோகங்களையும், 12ஆம் அத்தியாயமான பக்தியோகத்தையும் தினமும் தவருது படிப்பது அவர்வழக்கம். அந்த மகாத்மாவின் உள்ளம் அதற்கு நிகராக இன் ெருரு பாடலையும் பாடி வந்தது. அதுதான் 'வைஷ்ணவ ஜனதோ' என்ற பாடல். அதை நரசிம்மமேதா என்ற ராம பக்தர் இயற்றி யுள்ளார். வைஷ்ணவன் ஒருவன் எப்படி இருக்கவேண்டும் என்பதை மிகத் தெளிவாக எழுதியுள்ளார். எந்த மதத்தினரும் அப்பாட லைப் பொருளுணர்ந்து படித்து சிந்தித்து அதன்படி வாழ்ந்து வந்தால் இகபரமிரண்டி லும் அவன் வாழ்வாங்கு வாழ்ந்தவனவான். மண்ணில் உலவிடும் தெய்வமுமாவான்.

"எவன் ஒருவன் பிறர் துயரங்களை உணர் வானே, பிறர் கஷ்டங்களைக் களைந்து உதவு வானே, அகத்தில் அகந்தைக்கு இடமே கொடுக்கமாட்டானே அவனே உண்மையான வைஷ்ணவன்" என்று அப்பாடலின் முதல் பகுதி தொடங்குகிறது.

ஒருவன் தான் செய்த தீவினைப் பயனல் நோய்க்கு ஆளாகிறுன். வறுமையால் வாட்டப் படுகிறன். இப்படியெல்லாம் அவன் அலைக் கழிக்கப்படும் பொழுது அவன் அடையும் துய ரத்திற்கு முடிவில்லை. இத்தகைய துயரங் களால் அவதிப்படும் மாந்தரை நாம் நாள் தோறும் கண்டு வருகிறோம். நம்மில் பலர் அன்னவர் மீது அனுதாபமும், இரக்கமும் காட்டுவதோடு நின்றுவிடுகிறோம். ஆனல் அன்பின் முதிர்ச்சியால், கருணையின் பெருக் கால் சிலர் தங்கள் உணர்ச்சிகளைச் செயலுரு வில் காட்டி விடுகின்றனர். இரக்கமே இல் லாத கல் நெஞ்சத்தவனக இருப்பதைவிடக் கருணையும், அருளுணர்வும் இருப்பவன் பாராட் டத் தக்கவனே. ஆனல் வெறும் உணர்வோடு அவைகள் நின்றுவிடுமானல் ஏழையின் துயரை எங்ஙனம் போக்கமுடியும்? வெறும் உணர்ச்சி மாத்திரமே அல்லலைப் போக்கி அமைதி அளித்துவிடுமா? உணர்ச்சியும் செய லுருவில் தோன்றினல்தானே துயரத்தையும், துன்பத்தையும் நீக்க முடியும். மக்கள் நட மாடும் பாதையில் ஒரு தொழு நோயாளன் வீழ்ந்து சாகும் தறுவாயில் கிடந்தான். அவ னுடைய பரிதாபகரமான நிலையைப் பார்த்து வருவோர் போவோர் அவன் மீது இரக்கம் கொண்டனர். அனுதாபத்தோடு பேசிக் கொண்டு சென்றுவிட்டனர். அந்த வழியே ஸ்ரீமத் விவேகானந்த சுவாமிகளும் வந்தார். மற்றவர்களைப் போன்றுதான் அவரும் அம் மனிதனைப் பார்த்தார். ஆனல் அப்பார்வையில் ஆழம் இருந்தது. உருகினர். உடனே அவ னைத் தூக்கித் தன் தோள்மீது போட்டு அருகி லிருந்த மருத்துவமனையில் சேர்த்து அவனுக்கு உயிர்கொடுத்தார். அவரவர் உள்ளத்தில் இரக்க குணம் எந்த அளவில் வடிவெடுத்து உள்ளது என்பதை அவர்கள் செய்யும் செய லின் தன்மை காட்டிக்கொடுத்து விடுகிறது.

அடுத்து அகத்தில் அகந்தைக்கு இடம் கொடாதவனக வைஷ்ணவன் ஒருவன் இருக்க வேண்டும். எல்லாவிதக் குற்றங்களுக்கும் அகங் காரமே அடிப்படைக் காரணமாகும். இடத் திற்கும் சூழ்நிலைக்கும் தக்கவாறு இறுமாப்பு, அகந்தை, செருக்கு, ஆணவம் என அகங்கா ரம் பல்வேறு ரூபமெடுக்கிறது. இறைவனே இத்தனை உயிர்களுமாக இலங்குகிறுன் என்று

உணர்ந்து அவன் மயமாக உலகைக் கண்டு பழகுபவனுக்கு உள்ளத்தில் அகந்தை உரு வெடுப்பதில்லை. தன்னை மேலோனுகக் கருதி மற்றவர்களை அற்பமானவர்களாகக் கருது பவன் உள்ளத்தில் அகந்தை வளர்கிறது. கடவுள் சிருஷ்டியில் அனைவரும் சமமே. உயர்வு தாழ்வு பாராட்டுவது அறியாமையின் விளைவு. वासुदेवः सर्वमिति வாசுதேவன் தான் இவை யாவுமாய் ஆகியுள்ளான் என்பது கீதை வாக்கியம். தான் வழிபடும் தெய்வம் இத்தனை உயிர்களுமாய் ஆகி மிளிரும் பொழுது, விரோதி என்று ஒருவனைச் சிருஷ்டித்து அவ னுக்கு இடையூறு விளைவிப்பது, தன் வழிபடும் தெய்வத்திற்கே செய்யும் அபச்சாரமல்லவா? அனைத்து உயிர்களையும் நேசிப்பதன் மூலம் அவனுக்குச் சேவை செய்யும் பொழுது நம் உள்ளத்திலுள்ள அகந்தை ஒழிகிறது.

எவன் உலகத்தின் உயிரினம் அனைத்தையும் வணங்குகிருனே, எவன் பிறரை நிந்திக் கவே மாட்டானே, எவன் மனம், வாக்கு, காயம் ஆகியவற்றைச் சலனமின்றி வைத்துக் கொள்வானே அவனே உண்மையான வைஷ் ணவன். இது அடுத்து வரக்கூடிய பாடல்.

கையளவு நீரை ஆராய்வது கடல் நீரை முழுவதும் ஆராய்வதற்கு நிகர். சிலர் பறவை விலங்கு முதலியவற்றை நேசிப்பார்கள், உண விடுவார்கள், உயிரைப்போல் காத்து வளர்ப் பார்கள். ஆனல் மனிதனைக் கண்டால் விரட்டி யோட்டுவார்கள். இது பண்படாதவர்களின் போக்கு. எல்லா உயிர்களிலும் ஈசனைக் காண்பவர்கள் எந்த உயிர்களிடத்திலும் வேறு பாடு காணுவதில்லை. ஸ்ரீராமகிருஷ்ணர் தக்ஷி ணேசுவரத்தில் சாதனம் புரிந்து வருகையில் நடுஇரவில் எழுந்து ஹரிஜனங்கள் வாழும் சேரிகளுக்குச் சென்று வருவார். சேரிகளில் பிறருக்குத் தெரியாது தமது தலைமுடியால் தரையைச் சுத்தம் செய்து விட்டு வருவார். தாயே! இவர்களும் உன் மக்கள் தானே. ஏனம்மா இந்த வேற்றுமையை மக்கள் வளர்க் கின்றனர் என்று நைந்து உருகி பணிவிடை செய்து விட்டு வருவார். பகலில் சென்ருல் அக்கால முறைப்படி இவர்க்கு எதிர்ப்பு காத் திருக்கும். அவர்களுக்கும் இதனல் உபத்திர வம் வரலாம் என்றே நடுஇரவில் சென்று வந் தார். எங்கும் எல்லாரிடமும் அவர் அன்னை பராசக்தியையே கண்டவர். வெறுக்கத்தக்க வேசிகளிடத்திலும் காளிதேவியைக் கண்டவர். எல்லாச் சமயங்களிடத்தும், சமரச மனப் பான்மை கொண்டிருந்தார். 'கிறிஸ்துவ தேவா லயங்கள் வழியே நீ போக நேர்ந்தாலோ அல் லது மசூதியைக் கடந்து செல்ல வேண்டியிருந் தாலோ அந்தந்த கோயிலின் முன் நின்று கை கூப்பி தொழுதால் உனக்கு நலனே வாய்க்கும் என்று பக்தர்களுக்கு உரைத்தார். அவரும் அங்ஙனமே செய்தார்.

தங்களை மற்றவர்கள் எந்த விதத்திலும் துன் புறுத்தாவிட்டாலும், நல்லது செய்பவர்களைத் தாக்கிப்பேசுவதும், நிந்திப்பதும் அற்பர் களின் போக்கு. அவர்கள் கடைத்தரமான மக்கள். பிறர் தனக்கு இடையூறு விளைவிக் கிறபொழுது, கடுஞ்சொல் சொல்லிப் புண் படுத்தினல் அவரை நிந்திப்பதும், அவரில் லாத போது இழித்துப் பழிப்பதும் சாதாரண மக்களின் போக்கு. அவர்கள் இடைத்தரமான மக்கள். தனக்கு எவ்வளவு துன்பம் வந்தாலும், தன்னை எத்தனைபேர் தூஷித்தாலும் அதைக் கருத்தில் வாங்காது மேலும் நல்லதையே செய் பவர்கள் சான்ருேர். இவர்கள் தலைத்தரமான வர்கள். சாரதாதேவியார் கன்னிப்பருவத்தை யடைந்தவுடன் தம்மை ஆட்கொண்ட நாயக ரான ஸ்ரீ ராமகிருஷ்ணரைக் காணவேண்டி ஜய ராம்பாடியிலிருந்து தக்ஷிணேசுவரத்திற்குத் தன் தோழிகளுடன் புறப்பட்டு வந்தார். பரம ஹம்சரோடு இருந்து வந்த ஹிருதயர் என்ற உறவினர் தக்ஷிணேசுவரத்திலே முறையற்ற வழியில் பொருள் சேகரித்து வந்தான். அன்னையார் படகை விட்டு இறங்குவதைக் கண்டான். அவர் வருகையால் தன்னுடைய வருமானம் தடைப்படும் என்று கருதிய அம் மூடன் அன்னையாரை வாய் கூசாது கடுஞ் சொல் சொல்லிப் பரமஹம்சரைக் காணவிடாத படி வந்த தோழியருடன் திரும்ப ஊருக்குப் போகச் சொல்லி விட்டான். அந்த நிலையில் மற்றவர்மனம் எப்படியிருந்திருக்கும்! அன்பே உருவான அன்னையார் அமைதியாக இருந்தார். நிந்தித்தவனைக் குறித்து நொந்து கொள்ளக் கிடையாது. கேடு வரும் பின்னே மதிகெட்டு வரும் முன்னே என்ற கோட்பாட்டுக்கு ஒப்ப

சான்றோரை நிந்தித்த அந்த ஹிருதயன் தகூஷி ணேசுவரத்திலிருந்து குற்றங்கள் பல செய்த காரணத்திற்காகத் துரத்தியடிக்கப்பட்டு இறுதி நாளில் வேதனைப்பட்டு அலேந்தான்.

மாயமானைத் துரத்திச் சென்ற ராமன் அதனை அம்பு போட்டுக் கொல்ல அம் மான் வடிவந்தாங்கிய அரக்கன் ராமன் குரலில் 'லக்ஷ்மணு, சீதா' என்று கூவினன். 'உன் அண்ணனுக்கு ஆபத்து போலிருக்கிறது கூப்பிடுகிறுர் போ, உதவி செய்' என்று இளைய பெருமாளை அவசரப்படுத்தினள் சீதா பிராட்டி. லக்ஷ்மணனும் நிதானமிழக்காது 'ராமபிரானை யாராலும் கொல்லமுடியாது. தேவி சற்றுப் பொறுமையாக இருங்கள். இப் போது ராமபிரான் வந்து விடுவார்'' என்று எவ்வளவோ சொல்லிச் சீதாதேவியைச் சாந் தப்படுத்த முயன்றுன். ஆனல் சினத்தின் வசப் பட்ட சீதை பேசத்தகாத வார்த்தைகளைக் கூறி இலட்சுமணனைப் புண்படப்பேசி நிந்தித் தாள். கேட்கத் தகாத வார்த்தை சீதாதேவி மூலமாக வந்ததை யறிந்த இளையவன் அனலில் இட்ட புழுப்போல் துடித்தான், அலறினன். மறுமொழி ஒன்றும் பேசாது தான் ராமனேடு வரும் வரை இந்தப் பர்ணசாலையை விட்டு வெளியே வராதிருக்க வேண்டும் என்று மட்டும் விண்ணப்பம் செய்து கொண்டு கண் ணீரைப் பெருக்கிக் கொண்டு ராமனைத் தேடி ஓடினன்.

''பிறர்க்கின்ன முற்பகல் செய்யின் தமக்கின்ன
பிற்பகல் தானே வரும்.''

எண்ணம், சொல், செயல் என்ற முக்கரணங் களில் எதில் பிறர்க்கு இடையூறு விளைவித்தா லும் அதன் பலனை யாராக யிருந்தாலும் உடனே அனுபவித்துத்தான் தீரவேண்டும். விளைவு என்ன? ராவணன் வந்தான். சீதை யைத் தூக்கிச் சென்றுன். குற்றமற்ற லட்சு மணனை உள்ளம் நோகப் பேசியதன் பலன், ராவணன் கையிலகப்பட்டு அவதிப்பட்டது தான். சீதையின் கதியே இங்ஙன மென்றல் மற்றைய மாந்தரின் நிலை என்ன ஆகும்!

''ஒறுத்தார்க்கு ஒருநாளை இன்பம் பொறுத் [தார்க்குப்
பொன்றும் துணையும் புகழ்.''

உண்மையான வைஷ்ணவனுக்கு முன் மாதிரியாய் இருப்பவன் ஆஞ்சநேயன். அவ ரைச் சிறிய திருவடி என்றே வைஷ்ணவ உலகம் கொண்டாடுகிறது. ஏன்? அவர் ராம நாமத்தைத் தவிர வேறு எதிலும் மன தைச் செலுத்தியது கிடையாது. காம காஞ் சனத்தை அறவே துறந்த தூயவர் ஆவார். வைஷ்ணவ பக்தன் ஒருவன் அங்ஙனம் நலம் தரும் சொல்லாகிய நாராயணனின் நாமத்தை ஜபிப்பதில் காலத்தைக் கழிக்கவேண்டும். தெய்வத்தை மறக்கச் செய்து நம்மைப் படுகுழி யில் தள்ளிவிடும் காம காஞ்சனத்தை மலம் போல ஒதுக்கித்தள்ள வைஷ்ணவன் கடமைப் பட்டிருக்கிறுன். பெண்குலம் அனைத்தையும் தாய் சொருபமாக, தேவி சொருபமாகப் பார்த் துப் பழகவேண்டும். ராம சேவையின் மூலம் உள்ளத்தில் அகந்தை எழாதவாறு தன்னைப் பக்குவப் படுத்தினன் ஆஞ்சநேயன். உள்ளத் தில் எழுகின்ற தீய வாசனைகளை வேரறுக்க சேவை செய்வதற்கு நிகரான சாதனை கிடை யாது என்று தொண்டர் குலம் கருதி வரு கிறது. அதனல்தான் சிவனடியார்களுக்குத் திருத்தொண்டர்கள் என்றும், அவர்கள் வர லாறு திருத்தொண்டர் புராணம் என்றும் வழங்கி வருகிறது. மற்றைய மாந்தரை இறை வன் சொருபமாகக் கருதிப் பிரதிபலன் கரு தாது சேவை செய்கிறவர்களுக்கு அந்தக்கரண சுத்தி ஏற்படுகிறது. இறைவனை எளிதில் உணர அவர்கள் தகுதி உடையவர்கள் ஆகின்ற னர். ஆஞ்சனேயன் பணிவின் உறைவிடமாகத் திகழ்ந்தான். அதனல் எல்லாருடைய அன்புக் கும் அருளுக்கும் பாத்திரமானுன். அகந் தையை அகற்றுவது பணிவு. பள்ளமான இடத்திற்கே நீர் ஓடுவது போன்று பணிவு டைய பக்தன் ஒருவனிடத்தில் இறைவனின் அருள் சுரப்பது உறுதி. பணிவோடு கூடிய இன்சொல்லை உடையவனகப் பக்தனெருவன் இருக்கவேண்டும். பிறர்க்குப் பயன்பட வாழ்ந்து, பரமனின் நாமம் ஜபித்துப் பணி வைக் கடைப்பிடித்து, பயன்படும் பேச்சையே பேசி யாண்டும் பக்தர்களின் வரலாறுகளைப் படித்து அவர்களின் அடிச்சுவட்டைப் பின் பற்றி வளர்ந்து வருகிற வைஷ்ணவ உலகம் பரந்தாமனின் அருளைப் பெற்றுய்வது உறுதி.

(தொடரும்)

# கர்நாடக யாத்திரை

( சுவாமி சாந்தானந்தர் )

[ 160ஆம் பக்கத் தொடர்ச்சி ]

கோகர்ணத்தில் பால், தேன், நவதான்யம், அபிஷேகம் வில்வ அர்ச்சனை முதலியவற்றை யாத்திரிகர்களே செய்யலாம். உள்ளே செல்லக் கட்டணம் இருபத்தைந்து பைசா. அபிஷேக நீரைத் தலையில் தெளித்துக்கொள்ள வேண்டாம் என்று சொன்னார்கள். அர்ச்சகர் மந்திரங்களைச் சொல்லக் கிரியைகள் செய்தோம். மூலஸ்தானத்தில் இருந்தவரைப் பார்க்க மிகவும் பரவசமாய், உருக்கமாய் இருந்தது. இங்ஙனம் பூஜை செய்து முடித்த பிறகு வெளியில் நந்திக்கு முன்னால் நாகர் குடையுடன் மனித முகம் போன்ற வெள்ளிக் கவசம் அணிந்த லிங்கத்தின் முன்பு அமர்ந்தோம். ஒருவரை அதன் முன் எங்கள் அனைவரின் சார்பாக அமரச்செய்து அந்த லிங்கத்திற்குப் பூஜை செய்யச் சொன்னோம். மற்ற அனைவர் கையிலும் வில்வம், அக்ஷதை கொடுத்திருந்தார்கள். அர்ச்சகர் மிகவும் தெளிவாக, நிதானமாக, பதம்பதமாக சிவ ஸ்தோத்திரங்களைச் சொல்ல அனைவரும் திருப்பிச் சொன்னார்கள். இங்கும் மனதுக்கு வழிபாட்டினால் ஏற்படக்கூடிய பரமசாந்தம் ஏற்பட்டது. பூஜையை முடித்து எல்லாரும் அம்பாள் சந்நிதிக்குச் சென்றோம். சுவாமி இருக்கும் கர்ப்பக்கிரஹம் எண்கோணவடிவில் உள்ளது. வெளிப் பிரகாரத்தில் சுவாமி சந்நிதிக்குப் பின்புறம் அம்பாள் சந்நிதி உள்ளது. பார்வதி தேவி சிறிய வடிவில் அழகுடன் மிளிர்கிறாள். இங்கு ஐக்கிய வணக்கம் செய்தோம். கோகர்ண தேவாரப் பாடல்களைப் பாடினோம்.

......ஒன்றிய மனத்தடியார் கூடி இமையோர் பரவு நீடரவமார், குன்றுகள் நெருங்கி விரி தண்டலைமிடைந்து வளர் கோகர்ணமே.
— சம்பந்தர்.

......கால்களால் பயனென் கறை கண்டனுறைகோயில் கோலக்கோபுரக் கோகரணஞ் சூழாக்கால்களால் பயனென்...... — அப்பர்.

பிறப்பொன்றில்லாதான் காண்......இன்னவுரு என்று அறிய வொண்ணாதான் காண் ... பொய்யர் மனத்துப் புறம்பானவன் காண்... என் சிந்தை மேவினன் காண்... மாகடல் சூழ் கோகரணம் மன்னினனே — அப்பர்.

அமரநாதனை நினைவு கூர்ந்தோம். பைரவர் பைரவிகளாகி பம்பம் சங்கர......ஹர ஹர சங்கர என்று மாறிமாறி கோஷமிட்டோம். அப்போது கயிலையங்கிரியில் பார்வதிதேவி செய்கிற சிவபூஜையை நாங்கள் பார்த்துக் கொண்டிருப்பதுபோல் தோன்றியது. திரும்பவும் மகாபலேஸ்வரரைத் தரிசித்தோம். அங்கு முன் மண்டபத்தில் நிறைய மணிகள் வரிசையாகத் தொங்க விட்டிருக்கிறார்கள். எல்லாமணிகளிலும் ஏககாலத்தில் ஓசையை எழுப்பி ஓங்கார ஓசையில், பிரணவ ஓசையில் லயித்திருந்தோம். மனது முயற்சியின்றித் தானே சிவசிந்தனையில் மூழ்கியிருந்தது. பாடல் பெற்ற ஸ்தலங்களின் மகிமை இது.

தங்குமிடத்திற்குச் சென்றோம். இதுவரை ஒருவரை ஒருவர் அறிமுகப்படுத்திக்கொள்ளும் நிகழ்ச்சி நடைபெறவில்லை. இப்பொழுது அவகாசம் இருந்ததால், ஒருவரையொருவர் நன்கு அறிமுகம் ஆகுமாறு செய்தோம். இம்முறையில் புதிய ஆத்மீக நட்பு, உறவு ஏற்பட்டது. கோகர்ணம் சம்பந்தமான புராண வரலாறு இனிமையானது. இலங்கையில் ராவணனின் தாயார் தினமும் கடற்கரை மணலில் லிங்கம் செய்து வழிபட்டு வந்தாள். ஒரு நாள் அப்படிப் பூஜை செய்து கொண்டிருந்த போது ஒரு அலை சிவலிங்கத்தை உருக்குலைத்து விட்டது. அதனால் வருந்திய தாயின் துயரத்தை நீக்க ராவணன் கயிலையிலிருந்து ஆத்ம லிங்கத்தைக் கொண்டுவரச் சென்றான். அவனது பிரார்த்தனைக்கு இணங்கி சிவபிரான் ஆத்ம லிங்கத்தைத் தந்து விட்டார். தங்களுக்கு இதனால் ஆபத்து, தங்கள் சக்தி, பலம், சீர், சிறப்பு எல்லாம் போய்விடும் என்று தேவர்களும் விஷ்ணுவும் விநாயகப் பெருமானை வேண்டினர். அவர் ஒரு அந்தணச் சிறுவனாகி ராவணன் பின்னே சென்றார். விஷ்ணு தமது சக்ராயுதத்தால் சூரியனை மறைத்தார். மாலைப் பொழுது வந்து விட்டது. சந்தியாவந்தனம் செய்ய வேண்டுமே என்று

ராவணன் சுற்றிலும் பார்த்தான். அந்தணச் சிறுவன் ஒருவன் தென்பட்டான். ஆத்ம லிங்கத்தைக் கீழே வைக்கலாகாது. வைத்தால் அதை எடுக்க முடியாது. எனவே அச்சிறுவனிடம் அதைக் கொடுத்து வைத்திருக்கச் சொன்னான். "இதன் கனத்தை என்னால் வெகுநேரம் தாங்க முடியாது, வைத்திருக்க முடியா விட்டால் உன்னை மும்முறை கூப்பிடுவேன், நீ வராவிட்டால் கீழே வைத்து விடுவேன்" என்றான் சிறுவன். அதற்கு ஒப்புக் கொண்டு ராவணன் சந்தியாவந்தனம் செய்யப்போனான். சிறுவன் மும்முறை கூப்பிட்டான். ராவணன் வரவில்லை. கீழே வைத்து விட்டான் சிறுவன். ராவணன் வந்து பார்த்தான். எல்லாம் வீணாகி விட்டது. அவன் லிங்கத்தை அசைக்கக் கூட முடியவில்லை. கோபம் வந்து சிறுவனைக் குட்டினான். அந்தப் பள்ளம்தான் கணபதி மூர்த்தியின் தலையில் இருந்த பள்ளம் ஆகும். மஹாபலசாலியான ராவணனாலேயே அசைக்க முடியாத பலம் வாய்ந்தவர். ஆதலால் மஹா பலேஸ்வரர் எனப்படுகிறார். ராவணனால் பூலோகத்திற்குக் கொண்டுவரப்பட்டுக் கணபதியால் பிரதிஷ்டை செய்யப்பட்ட லிங்கம் இது. இதைப் பூகைலாசம் என்றும் சொல்லலாம். நாம் தினம் விக்ரஹத்தை வைத்து வழிபடுகிறோம். நம் அருள்நாட்டத்தால், உண்மையான பக்தியினால், ஞானத்தால் ஆத்மலிங்கமாக இறைவனே எழுந்தருளவேண்டும். நம் பூஜை இங்ஙனம் ஆகவேண்டும் என்ற கருத்துத்தான் இப்புராணக்கதையின் குறிக்கோள் ஆகும். இரவு உணவு சாப்பிட்டுவிட்டு இத்தகைய ஆத்ம சிந்தனையுடன் தூங்கினோம்.

25-9-77 அன்று விடியற்காலம் காலைக்கடன்களை முடித்துக் கொண்டு ஸ்ரீ மஹாபலேஸ்வரர் கோவிலுக்குச் சென்று சிவபுராணம் முழுவதும் சொல்லி இறைவனை வணங்கிப் பிரியா விடைபெற்று 6-30 மணிக்குக் கோகர்ணத்திலிருந்து புறப்பட்டோம். பஸ் போய்க்கொண்டிருக்கிறது. இயற்கைக் காட்சிகளைக் கண்டு களித்துக்கொண்டே போனோம். 8-30 மணிக்குக் காலை டிபனாகக் கைவசமிருந்த பலகாரங்களையே சாப்பிட்டோம். பஸ் மலைப்பாதையில் போய்க்கொண்டிருக்கிறது. பாதை வளைந்து வளைந்து போகிறது. சாராவதி நதி பள்ளத்தில் ஓடிவருவது மிக அழகாக இருக்கிறது. திடீரென்று பஸ் நிற்கிறது. அங்குச் சாராவதிநதி பள்ளத்தாக்கு – அரியகாட்சி என்று போர்டு போட்டிருக்கிறது. இடப்பக்கம் மலை, வலப் பக்கம் ஆழமான பள்ளம். வெய்யில் இல்லை. மங்கிய வெளிச்சம். நிலவு போன்று குளிர்ந்திருக்கிறது. தூரத்தில் சித்திரத்தில் வரைந்தது போன்று சாராவதி நதி அணையிலிருந்து கம்பீரமாக ஓடி வருகிறது. அதன் இருமருங்கிலும் வனம் அடர்ந்திருக்கிறது. மலை அடுக்கடுக்காய்ப் பரந்து தெரிகிறது. மலை ஓடிவரும் தன்மகளாகிய நதியை மார்போடு தழுவிக் கொள்ள இருகைகளையும் ஆர்வமுடன் விரித்து நிற்பது போல் இருக்கிறது. அங்கிருந்து சுமார் ஒரு மைல் தூரம் யாவரும் நடந்துபோனோம். அவரவர் மனதுக்கு ஏற்ப எண்ணிக்கொண்டும், பேசிக்கொண்டும் போனோம். நாங்கள் சொல்லியிருந்தபடியே குறித்த வேளைக்கு டிரைவர் வழியில் சற்றுப் பின் தங்கியவர்களை ஏற்றிக்கொண்டு பஸ்ஸைக் கொண்டு வந்தார். அனைவரும் ஏறியவுடன் ஜெயகோஷம் போட்டுப் பயணம் தொடர்கிறது. வழியில் கம்பராமாயணம் சொல்லப்பட்டது. அவர் சொன்ன முக்கிய கருத்துக்களை மட்டும் எழுதுவோம். "உயர் தனிப் பரம்பொருள் உலகில் தர்ம சம்ஸ்தாபனம் செய்ய அவ்வப்போது மானுடனாக அவதரித்து வருகிறார். அதில் ராமாவதாரம் ஒன்று. ஸ்ரீராமன் தெய்வ சம்பத்துக்கள் அனைத்தும் வாய்ந்தவன். சீலம், ஒழுக்கம், வீரம், தவம், பக்தி, அன்பு ஆகிய எல்லா நற்குணங்களும் வாய்ந்த நரோத்தமன் அவன். அவன் 'கோசலை இன்பப் பெருக்கினராம், கோசிகன் விழைநிதி ஆனவராம், தாடகை அரக்கியை வதைத்தவராம், மாரீசாதியை வீழ்த்தினராம், முனிபுரி வேள்வியைக் காத்தவராம், அகல்யை சுய உரு மீட்டினராம். அப்போது விசுவாமித்திரர் ராமனை

"இவ்வண்ணம் நிகழ்ந்தவண்ணம் இனியிந்த
உலகுக்கெல்லாம்
உய்வண்ணம் அன்றிமற்றோர் துயர்வண்ணம்
உறுவதுண்டோ
மைவண்ணத்(து) அரக்கிபோரில் மழை
வண்ணத்து அண்ணலே யுன்

கைவண்ணம் அங்குக் கண்டேன் கால்
வண்ணம் இங்குக் கண்டேன்''

என்று புகழ்ந்தார். கௌதமன் பூசனை ஏற்றவராம், மிதிலையர் மனங்கவர் எழிலினராம். விசுவாமித்திரர், ஸ்ரீ ராமன், லக்ஷ்மணன் மூவரும் மாலைநேரத்தில் மிதிலை நகருக்குள் நுழைகின்றனர். கொடிகளும் தோரணங்களும் தம்நாயகனாகிய ராமனைவா,வா என்று மகிழ்வுடன் கைவீசி அழைக்கின்றன. ராமனைப் பார்த்த மிதிலைநகர மக்களுக்குப் பெருமகிழ்ச்சி உண்டாயிற்று. அழியா அழகுடையானின் அழகை யாரும் முழுதும் பார்க்கவில்லை. ராமன் தோள் கண்டார் தோளே கண்டார். அவன் முகத்தைப் பார்த்தவர்கள் பார்வை முகத்திலேயே நிலைத்துவிட்டது. அவன் திருவடிகளைக் கண்டவர்களுடைய மனது திருவடிகளிலேயே நிலைத்துவிட்டது. அழியா அழகின், தெய்வ அழகின் மகிமை இது. சனகரின் இதயம் அலர்த்தினராம், முக்கண்ணன் வில்லை ஒடித்தவராம், சீதை இடும் மணமாலையராம், திருமணம் புரிபெரும் குதூகலராம், மழவினர் தருக்கினை மாய்த்தவராம், திருமலி அயோத்தியர்க்கு ஆனந்தராம். இன்று இத்துடன் நிறுத்துவோம்.'' பாலகாண்டம் முடிந்தது.

ராமாயணம் கேட்டுக் கொண்டே ஜோக் நீர் வீழ்ச்சிக்கு வந்துவிட்டோம். நேர் நீர்வீழ்ச்சிக்குப் போனோம். நாங்கள் நீர்வீழ்ச்சியின் எதிர் மலையில் இரண்டு பர்லாங்கு தூரத்துக்கு அப்பால் நிற்கிறோம். நீர்வீழ்ச்சிக்குச் சற்று உயரமாகவே நாங்கள் நிற்கிறோம். இரண்டு மலைகளுக்கு இடையில் அருவி வீழ்கிறது. தண்ணீர் குறைவாகத்தான் இருந்தது. ஆயினும் நான்கு அருவியிலும் தண்ணீர் வீழ்ந்து கொண்டிருந்தது. இயற்கையின் வித விதமான எழிலைக் கண்டுகொண்டே வருகிறோம். அதில் நீர்வீழ்ச்சி ஒரு அழகு. அவற்றையெல்லாம் கண்டு ரசித்துவிட்டு Youth Hostel என்னும் விடுதியில் தங்கினோம். அதன் எதிரில் பெரிய ஏரி ஒன்று இருக்கிறது. அதில் அனைவரும் குளித்துத் துணிகளைத் துவைத்துக் கொண்டோம். இன்று இந்த யாத்திரையில் நாங்களே சமைத்துச் சாப்பிட்டோம். உணவை முடித்துக்கொண்டு 4-30 மணிக்கு லிங்கன் முகி என்னும் இடத்திலுள்ள சாராவதி அணையைப் பார்க்கச் சென்றோம். நாங்கள் ஐந்நூறு அடி மேட்டில் இருந்து அணையைப் பார்த்தோம். தூரத்தில் அணை முழுவதும் சித்திரம் போன்று தெரிகிறது. ஆறும், அணையும், மலையும் அழகாகக் காட்சியளிக்கின்றன. மாலை 5-30 மணிக்கு இருப்பிடத்துக்குத் திரும்பி வந்து சேர்ந்தோம்.

ஜோக் நீர்வீழ்ச்சியைப்பற்றிய விவரங்களை அங்குள்ள இன்ஜினியர் மிகவும் விரிவாகவும், அழகாகவும் சொன்னர். இவர்தாம் அந்த இடத்தின் மலைவளர்க் காதலிப் பெண் உமையின் மகளாகிய சாராவதி தேவியின் குருக்கள் ஆவார். அவர் சொன்னது சாராவதியின் ஸ்தலபுராணம் ஆகும். அதுவும் ரசமானது தான், கேட்போம். சாராவதி நதி ஐம்பத்தெட்டு மைல் நீளமுள்ளது. உலகிலேயே மிகக் குறைந்த நீளமுள்ள நதி இது. ஆனல் பயன் படுவதிலோ தலையாயது. அரபிக்கடலில் சங்கமம் ஆகிறது. இந்நதி சில இடங்களில் அருவியாக வீழ்கிறது. அதில் ஜோக் அருவி ஒன்று. ஜோக் அருவியைத் தவிர இதர அருவிகளில் மின்சாரம் எடுக்கிறார்கள். மைசூரின் மொத்த மின்சாரத் தேவையில் முக்கால் பகுதிக்கு மேல் சாராவதி மின் நிலையங்களிலிருந்து கிடைக்கிறது. ஜோக் அருவியை முதல் முதலில் கண்டுபிடித்தவன் ஒரு ஆங்கிலேயன். கன்னடக் கவிஞன் ஒருவன் ஜோக் நீர்வீழ்ச்சி பற்றி அழகான கவிதை ஒன்று இயற்றி அதை மக்களுக்கு அறிமுகப்படுத்தினன். அக் கவிதையைப் பார்த்துத்தான் விஸ்வேஸ்வரய்யா அவர்களுக்கு இந்த நீர் வீழ்ச்சி பற்றித் தெரிய வந்தது. இதை நன்கு பயன் படுத்த வேண்டும் என்று அவர் திட்டமிட்டு மின்நிலையங்கள், அணைக்கட்டுகள் எல்லாம் கட்டினர். இந்த மின் நிலையங்களில் ஒன்றைக் காந்திஜி திறந்து வைத்துள்ளார். அது அவர் பெயரால் விளங்கி வருகிறது. ஜோக் அருவியின் உயரம் 960 அடி. அகலம் 200 அடி. தமிழ்நாட்டிலுள்ள குற்றலம் ஐந்தருவி போன்று இந்த நீர்வீழ்ச்சியும் நான்கு பிரிவுகளாகப் பிரிந்து விழுகிறது. அவைகளை முறையே ராஜா, ரோரர், ராக்கெட், ராணி என்று பெயரிட்டிருக்கிறார்கள். அருவியைப் பார்க்கும்போது இப்பெயர்கள் மிகப்

பொருத்தமானவைகளாய்ப் படுகின்றன. தர் பார் கலைந்தவுடன் ராஜா தன் சிம்மாசனத்தி லின்றும் எழுந்து படியில் கீழே கம்பீரமாகப் பாதங்களைத் தூக்கி வைத்து இறங்கி வரு வது போன்று முதல் அருவி காட்சி தருகிறது. பாறைகளில் துள்ளிக் குதித்து ஓடி வந்து மலையின் நுனியில் கம்பீரமாகத் தாவி வீழ்வது ராஜ கம்பீரமாக இருக்கிறது. இது மற்ற மூன்றையும்விடச் சற்று உயரத்திலிருந்து விழுகிறது. இரண்டாவது ரோரர், அதாவது கர்ஜனை அல்லது இரைச்சல் என்று பொருள். நீர்வீழ்ச்சியிலிருந்து வருகிற சப்தம் முழுவதும் இதனால் ஏற்படுகிற சப்தம்தான். இந்த அருவி யில் நீர் சிதறி விழுகிறது. அதன் அடித்தளம் அங்ஙனம் அமைந்துள்ளது போலும். மூன்றா வது ராக்கெட். இதன் தண்ணீர் பாறையி லிருந்து பிரிட்டுக்கொண்டு தாவிக் கொண்டு வருவது போன்று இருக்கிறது. மேலே பரந்து தெரிந்தாலும் பாதி தூரத்துக்குக் கீழே அது ஒரே தாரையாக, அலை அலையாக, வேகமாகக் கீழே விழுகிறது. நாலாவது அருவி பாறையை ஒட்டி வழிந்து கொண்டு விழுகிறது. எவ்வ ளவு அதிகமான வெள்ளம் வந்தாலும் நான்கா வது அருவி இப்படித்தான் விழும். இந்த அருவி பாறையைச் சார்ந்து இருக்கிறது. மைசூர் மஹாராஜா இருந்தபோது பெரிய, அரசாங்க, ஆங்கிலேய அதிகாரிகள், ராஜப் பிரதிநிதிகள் வரும்போது ஆயிரக்கணக்கான தொன்னைகளில் எண்ணெயும் திரியும் போட் டுத் தீபம் ஏற்றி அவற்றை வரிசையாக அருவி யில் விடுவார்கள். அருவி ஒரு ஜோதிப் பிழம்பு போல அழகாய் இருக்கும். அப்போது தீப ஜோதி அருவி பார்க்க வெகு அழகாய் இருக் கும். இது ஒரு உல்லாசப்பயண ஸ்தலம். நிறைய விடுதிகளும், ஹோட்டல்களும் உள் ளன. குறித்த தினங்களில் அணையிலிருந்து அதிக நீர் திறந்து விடுவார்கள். அப்போது அருவிகள் நிறைந்து நீர் விழும். இது இந் நதியைப் பற்றிய நவீனம். இந்த நதியைப் பற்றிய புராணம் ஒன்றும் உள்ளது. ஜமதக்னி முனிவர் இப்பக்கங்களில் வாழ்ந்து தவம் செய்து வந்தார். அவருடைய பத்தினி ஒரு தவறு செய்து விட்டாள். அதற்காக அவளைக் கொன்றுவிட வேண்டுமென்று ஜமதக்னி தம் மகனை பரசுராமனுக்குக் கட்டளையிட்டார். அவரும் தம் தாயைக் கொன்றுவிட்டு இந்த நதியில் கத்தியைக் கழுவினராம். சரம் என் றால் அம்பு அல்லது கத்தி. அம்பு போன்று வேகமாகப் பாய்வதாலும் இதற்குச் சாராவதி என்று பெயர் வந்தது. அருவிக்குக் கீழே போகப் பாதை இருந்தது. நாங்கள் யாரும் போகவில்லை. இவைகளை யெல்லாம் பார்த்து விட்டு ஒரு இடத்தில் அமர்ந்து ஐக்கிய வணக் கம் செய்தோம். அதில் ஒரு கருத்துச் சொல் லப்பட்டது: ''இதுவரை கோவில்களையே தரிசித்து வந்தோம். இன்றுதான் ஆலயத்தில் சுவாமி தர்சனம் இல்லை. இத்தனை நாட்கள் இருந்த மனப்பான்மைக்கும் இன்றுள்ள மனப் பான்மைக்கும் உள்ள வித்தியாசம் நன்கு தெரி கிறது. இந்த வித்தியாசத்தின் காரணம் ஆலயத்தின் மகிமையே ஆகும். நாம் பக்தி யில் இன்னும் மேல் நிலைக்குப் போய் விட்டால் சர்வம் வாசுதேவ மயம் ஆகிவிடும். நமது பக்தி வளர வேண்டும்.'' ஐக்கிய வணக் கத்தை முடித்துவிட்டுச் சாப்பிட்டோம். ஸ்ரீலஸ்ரீ திருச்சி சுவாமிகளின் அன்பராகிய இன்ஜினி யர் ஒருவருடைய ஏற்பாட்டின்படி இங்கு இரவு எங்களுக்கு மிகவும் பெரிய விருந்து வைத்தார்கள். பிரதிபலன் எதிர்பாராது பக்தர்களை உபசரிப்பது நம் நாட்டின் பண்பு. எங்களுக்கு விவரங்கள் சொல்லி விருந்து வைத்த இன்ஜினியருக்கு அன்பும் நன்றியும் தெரிவித்துவிட்டு அனைவரும் விடுதிக்குச் சென் றோம். சாராவதி நதியை மைசூரில் நன்கு பயன்படுத்துகிறார்கள். இயற்கையின் வளங் களை, ஒப்பற்ற சக்தியை நன்கு பயன்படுத்தி யுள்ளார்கள். இயற்கையின் சக்திகளை நன்கு பயன்படுத்தா விட்டால் நமது விஞ்ஞான கலைக் கூடங்கள் அனைத்தும் வீணே. நமது வாழ்க் கைச் செயல்கள் யாவும் விழலுக்கு இறைத்த நீராகி விடலாகாது. பிரயோஜனமான வாழ்வு வாழவேண்டும். இந்த மானுட ஜன்மத்தைக் கடவுளை அறிவதற்கென்று பயன்படுத்தா விட்டால் இந்த வாழ்வை வீணடித்ததாகும் என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் பகர்ந்துள்ளார். இறைவா, எங்கள்வாழ்வைப் பிரயோஜனமான தாக்கு. நீ எங்களுக்கு அருள்புரி என்று அனை வரும் பிரார்த்தித்துக் கொண்டு விடுதியில்

நன்கு தூங்கினோம்.

26—9—77 அன்று வழக்கம் போல் விடியற் காலம் எழுந்து காலைக்கடன்களை முடித்து, காபி மட்டும் அருந்திவிட்டு விடுதியினின்று புறப்பட்டோம். ஜோக் அருவி காலை வேளையில் தரும் காட்சியைப் பார்த்துவிட்டு 6-30 மணிக்கு அங்கிருந்து புறப்பட்டோம். வழியில் சாராவதி அணை தெரிகிறது. இயற்கை அழகை ரசித்துக் கொண்டே சென்றோம். எட்டு மணிக்கு நாங்கள் தயார் செய்துகொண்டு வந்திருந்த கட்டுச் சாதத்தைச் சாப்பிட்டோம். அது மிகவும் ருசியாக இருந்தது. ஆற்றங் கரை. அதன் கரையில் ஒரு மரத்தடியில் மேடை கட்டி அதில் ஒரு சிறு கோவில் இருக்கிறது. அது ஏதோ கிராமதேவதையின் கோயில். அதில் அமர்ந்து சாப்பிட்டோம். சூழ்ந்திருந்த ஏழைக் குழந்தைகளுக்கு இரண்டு தடவை பகவான் நாமம் சொல்ல வைத்து எங்கள் முத்தண்ணா மீதி சாப்பாட்டைத் தந்து விட்டார். இந்த முத்தண்ணா எங்கள் அனைவருக்கும் செல்லப்பிள்ளை. இவர் நமது பலகாரங்களை விநியோகம் செய்யும் பொறுப்புள்ளவர், பஸ்ஸில்எங்கள் எண்ணிக்கையைப் பஸ்புறப்படும் போதெல்லாம் சரி பார்க்கிறவர். அனைவருக்கும் தேவைக்கு மேலும் பலகாரம் கிடைக்கும். சாப்பிட்டு மீதி இருந்தால் அதையும் வாங்கித் தனியாக வைத்துக்கொள்வார். அதையெல்லாம் இப்படி எங்காவது பஸ் நிற்கும் போது சிறு குழந்தைகள் சூழ்ந்து நிற்பார்கள் அல்லவா, அப்போது அவர்களைப் பகவான் நாமம் சொல்ல வைத்து மீதிப் பலகாரங்களைத் தருவார். பஸ் புறப்பட்டது. ஒலிபெருக்கியில் ஒருகருத்துச் சொல்லப்படுகிறது: 1970ல் நாங்கள் பத்ரி, கேதாரம் சென்றோம். அப்போது தமிழ்நாட்டைச் சேர்ந்த சுவாமி ஒருவர் எங்களுக்கு மிகவும் துணையாக அமைந்தார்கள். அவர் எதற்கெடுத்தாலும் கவலைப் படாதீர்கள் என்று சொல்லுவார். ஆகையால் எங்கள் கூட்டத்தினர் அவரைக் 'கவலைப்படாதீர்கள் சுவாமி' என்று அழைக்க ஆரம்பித்து விட்டார்கள். அது அவருடைய பெயராகி விட்டது. நாம் வாழ்க்கையில் எதற்கும் கவலைப்படக் கூடாது. கஷ்டம் வந்தால் வாய்ப்பு என்று எண்ண வேண்டும். இறைவன் செயல்கள் எல்லாம் நன்மைக்கே என்கிற வேதவாக்கியம் உண்மை. நம் விஷயத்தில் மட்டும் பொய்யாகிவிடுமா? அது நம் நன்மைக்கே என்ற நம்பிக்கை வேண்டும்.'' ராமாயணம் தொடர்ந்து சொல்லப்பட்டது. கணக்கரும் குண கணப் பூணினராம், பார்மகள் காமுறும் பாக்கியராம், முழுமதியம் பொரு முகத்தினராம், தாதை சொற்படி வனம் சார்ந்தவராம். அவர்கள் மூவரும் வனத்தில்சென்ற காட்சியைக் கம்பர் இங்ஙனம் வர்ணிக்கிறார்.

''வெய்யோனொளி தன்மேனியின் விரிஜோதியின் [மறைய
பொய்யோ வெனும் இடையாளொடும் இளையா [னொடும் போனான்
மையோ மரகதமோ மறிகடலோ மழைமுகிலோ
ஐயோ இவன் வடிவுஎன்பதோர் அழியா அழ [குடையான்.''

''அழியா அழகுடையவன் வனத்தில் முனிவர்களுடன் மிக்க மகிழ்வுடனும், தவமியற்றியும் வாழ்ந்துவந்தான். பிரிய நற்குகன் உணர்நிலையினராம், பரத்வாஜமுனி மகிழ்வித்தவராம், சித்திரகூடத் தமர்ந்தவராம், தயரதன் உளம் நழுவாதவராம், பரதன் விழைந்துழை பரிவினராம், பிதிர்க்கடனாற்றிய பெருமையராம், பாதுகை பரதருக்கீந்தவராம், தண்டகா வனஜன பாவனராம், கொடுவினை விராதனைக் கொன்றவராம், சரபங்க சுதீக்ஷ்ண அர்ச்சிதராம், தமிழ் முனி கொடுசிலை தரித்தவராம்,கழகரையன் தொழ காதலராம். ஜடாயுவும் அவனது அண்ணன் சம்பாதியும் சூரியனை நோக்கிப் பறந்தார்கள். அவர்கள் மேலே செல்லச் செல்ல குறிப்பிட்ட ஒவ்வொரு உயரத்திலும் கீழே உலகின் காட்சி எப்படி இருக்கிறது என்று வால்மீகி ராமாயணத்தில் வர்ணிக்கப்பட்டுள்ளது. இப்போது ராக்கெட்டில் மேலே பறந்து வெவ்வேறு உயரங்களிலிருந்து இவ்வுலகைப் படம் எடுக்கிறார்கள். எப்படி இருக்கிறதென்று வர்ணித்திருக்கிறார்கள். இதுவும் வால்மீகியின் வர்ணனையும் ஒத்திருப்பது ஆச்சரியமான விஷயம். நவீன சாதனங்கள் ஏதும் இல்லாத அக்காலத்தில் எப்படி இதை அறிந்தார்கள்? அவர்களுடைய அறிவுக் கூர்மைக்கு, ஞானக் கண்ணுக்கு இவை சான்றாகின்றன. இந்தச் சடாயு

தசரதனது நண்பன். தசரதனது பிரிவுக்கு வருந்தி, ராமனுக்கு வனத்தில் உதவி செய்வதாகவும் பாதுகாப்பாக இருப்பதாகவும் சொல்லிச் சென்றது. நாம் நல்லவர்களாக இருந்தால் உலகில் நமக்கு எல்லாமே துணையாக அமையும். கடவுள் நமக்கு எப்போதுமே துணையாக இருப்பார். பஞ்சவடி வனம் உறைந்தவராம், சூர்ப்பநகையின் மூக்கரிந்தவராம், கரதூடணருயிர் களைந்தவராம், திருவிழை மானின் பின் சென்றவராம், மாரீசனைக் கொலும் வாளியராம், தேவியை இழந்துபின் தேடினராம். இன் கழுகினை வான் ஏற்றினராம். தன் உயிரைப் புகழுக்குவிற்ற ஜடாயு என்று பின்னல் ஹனுமான் புகழ்கிறன். சபரி தரும்கனி நுகர்ந்தவராம், கபந்தனின்தோளினைத் துணிந்தவராம். இன்று இத்துடன் நிறுத்துவோம்.'' இன்று அயோத்தியா காண்டமும், ஆரண்ய காண்டமும் முடிந்துள்ளன.

ராமாயணம் கேட்டுக் கொண்டே மாலை 2 மணிக்கு சிருங்கேரி வந்து சேர்ந்தோம். ஹோட்டலில் சாப்பிட்டோம். சிருங்கேரி சங்கராச்சாரியார் மடத்தைச் சேர்ந்த விருந்தினர் விடுதியில் தங்கினேம். அது ஆலயத்துக்குப் பக்கமாக உள்ளது. பக்கத்தில் துங்கா நதி ஓடுகிறது. பெரிய படித்துறை இருக்கிறது. கோவில் மதிலை ஒட்டித்தான் நதி ஓடுகிறது. அதில் அனைவரும் குளித்தோம். பெரிய பெரிய மீன்கள் அதில் இருக்கின்றன. அவைகள் பயமின்றி குளிக்கிற படித்துறையில் சஞ்சரிக்கின்றன. அவைகளை யாரும் ஹிம்ஸிப்பதில்லை. அது பார்ப்பதற்கு அழகாக இருக்கிறது. சங்கரர் பிரம்ம வித்யா சொருபிணியான ஸ்ரீ சாரதாம்பாளைப் பிரதிஷ்டை செய்து ஸ்ரீ சாரதா பீடத்தை நிறுவினர். அக்கோவிலுக்குச் சென்றேம். அம்பிகை அமர்ந்த கோலத்தில் மிகவும் அழகாகக் காட்சியளிக்கிருள். கருங்கல்லில் அவர் வடித்த ஸ்ரீ சக்கர ஆசனத்தில் அம்பாள் அமர்ந்துள்ளாள். மேல் வலக் கையில் ஜபமாலை, கிளி, கீழ் வலக்கையில் சின்முத்திரை, மேல் இடக் கையில் அமிர்த கலசம், கீழ் இடக்கையில் புத்தகம் இவைகளோடு அம்பாள் விளங்குகிருள். ஆதிசங்கரர் ஆதியில் சந்தன மரத்தில் செய்த சிலையைப் பிரதிஷ்டை செய்தாராம். அறுநூறு ஆண்டுகளுக்கு முன்பு சங்கரர் பரம்பரையில் வந்த ஸ்ரீ வித்யாரண்யர் காலத்தில் இப்போதுள்ள பஞ்சலோக விக்ரஹம் பிரதிஷ்டை செய்யப்பட்டது. விபாண்டக மகரிஷியின் குமாரரான ரிஷ்ய சிருங்கர் இங்குத் தவம் செய்து வாழ்ந்ததால் இதற்கு சிருங்ககிரி என்று பெயர் ஏற்பட்டது. பின்னல் அது மருவி சிருங்கேரி என்று ஆயிற்று. ஆதிசங்கரர் மடம் ஸ்தாபிக்க இடம் பார்த்துக் கொண்டு தெற்கே சஞ்சாரம் செய்து கொண்டிருக்கையில் இவ்விடத்தில் ஒரு அரிய காட்சி கண்டார். கர்ப்பிணியான தவளை ஒன்று வெயிலின் கொடுமை தாளாது வாடிக் கொண்டிருந்தது. அதைப் பார்த்த ஒரு நல்ல பாம்பு தவளைக்கு மேல் தன் படத்தை விரித்து அதற்கு நிழல் உண்டாக்கியது. கிருபாகரனுகிய ஜகத்ரக்ஷகனுகியகடவுளின் சாம்ராஜ்யத்தில் அன்பு கோலோச்சும் இவ்விடத்தில், இயற்கை எழில் மிகு சிருங்கேரியில் அன்றே ஸ்ரீமடம் நிறுவ அடிக்கல் நாட்டினர் சங்கரர். துங்கா நதிக்கரையில் கல்லில் இச்சிற்பம் உள்ளது. வேட்டை நாய்களுக்குப் பயந்து ஓடிய முயல்கள் குறிப்பிட்ட ஒரு இடத்தில் நாய்களை எதிர்க்க நாய்கள் பயந்து திரும்பிய அவ்விடத்தில் பாஞ்சாலங்குறிச்சி கோட்டை கட்டப்பட்டது என்று படிக்கிறேம். அது வீரம் நிரம்பிய ஸ்தலம். இங்கு அன்பே சிவம் என்பது பிரத்யக்ஷமாகியது. மக்கள்பேரில் உள்ள பேரன்பினல் தூண்டப்பட்டு அவர்களுடைய நன்மைக்காக ஒரு மடம் நிறுவ இது நல்ல இடமாயிற்று. இவையெல்லாம் இயற்கையில் காணக்கிடைக்காத அபூர்வக்காட்சிகள். சங்கரர்போன்ற மேலோர்களுக்கு,தெய்வப் பிறவிகளுக்கு நம் கண்ணுக்குத் தெரியாத காட்சிகள் எல்லாம் தெரிகின்றன. கடவுள் அன்பு நிறைந்தவர். இல்லை அன்புதான் கடவுள். இப்பிரபஞ்சம் கடவுள் அருளில் இருந்து தோன்றியது, கடவுள் அருளில் அது நிலை பெற்றிருக்கிறது, கடவுள் அருளில் அது ஒடுங்குகிறது என்கிற வேதவாக்கியம், என்கிற உண்மை, என்கிற தத்துவம் அவர்களுக்கு சூக்ஷ்ம நிலையிலேயே விளங்குகிறது; உணர்கிறர்கள். இந்த உண்மை ஸ்தூல வடிவம் எடுத்து, தவளைக்குப் பாம்பு நிழல் பிடித்து,

அவர்களுக்குப் பிரத்யக்ஷமாகின்றன. இக் காட்சி அவர்களுடைய இறை உணர்வுக்கு மேலும் உரமும் மெருகும் ஊட்டுகின்றன.

துங்காநதியின் எதிர்க்கரையில் ஸ்ரீ சங்கர மடம் உள்ளது. துறவியர்கள் வாழும் இட மும் பெருநிலை அடைந்த மிகச் சிறந்த சுவாமி களின் சமாதி ஆலயங்களும் அங்குள்ளன. மிகவும் அருமையான படுகை பூமி. ஏதோ சில பாக்கு மரங்கள் உள்ளன. ஆச்ரமத்தில் படகு ஒன்று வைத்துள்ளார்கள். அடுத்தகரை யில் உள்ள அவர்களுடைய ஸ்ரீ சாரதாம்பாள் கோவிலுக்கு அடிக்கடி போகவும் வரவும் இருப்பார்கள். நாங்களும் அப்படகில்தான் போய் வந்தோம். பொது மக்களையும் அதில் ஏற்றிக்கொள்கிறார்கள். படகில் ஏறி எதிர்க் கரை வந்து சேர்ந்தோம். ஸ்ரீ சாரதாம்பிகை கோவிலுக்கு அருகில் ஜனார்த்தனன் கோவில் உள்ளது. இருபுறமும் கருடாழ்வார், ஆஞ்ச நேயர் காட்சியளிக்கின்றனர். எழுநூறு ஆண்டுகளுக்குமுன்பு சிருங்கேரி சுவாமிகளாக இருந்த ஸ்ரீ வித்யா சங்கர தீர்த்தருக்கு ஒரு ஆலயம் கட்டியுள்ளார்கள். அவ்வாலயம் ஸ்ரீசக்கர வடிவில் அமைந்துள்ளது. உள்ளே மூலஸ்தானத்தில் நடுவில் லிங்கம், இடப் பக் கம் துர்க்கை அம்மன், வலப்பக்கம் ஸ்ரீவித்யா கணபதி சந்நிதிகள் உள்ளன. முன் மண்டபம் செல்ல மேற்குப் பக்கம் தவிர மற்ற மூன்று பக்கங்களிலும் மூன்று வாயில்கள் உள்ளன. ஒவ்வொரு வாயிலிலும் உள்ள துவாரபாலகர் கள் முறையே சிவச்சின்னம், விஷ்ணுசின்னம், தேவியின்சின்னங்களைக் கரங்களில் ஏந்தி யுள்ளார்கள். வெளிச் சுவரில் புராண நிகழ்ச்சிகளை அளவில்லாத சிற்பங்களில் செதுக்கியுள்ளார்கள். உள்ளே முன் மண்ட பத்தில் பன்னிரண்டு இராசிகளுக்குப் பன்னி ரண்டு தூண்கள் அமைத்துள்ளார்கள். ஒவ் வொரு மாத ஆரம்பத்திலும் சூரிய ஒளி அதி காலையில் ஒவ்வொரு தூணில் விழும். உத்த ராயணத்தில் சூரியன் வடக்கேயும், தக்ஷிண யனத்தில் தெற்கேயும் சஞ்சரிக்கிறான். மூன் றடி அகலமுள்ள வாசல் வழியாகச் சூரிய வெளிச்சம் உள்ளே வரவேண்டும். (தொடரும்)

# ஸ்ரீ ஸாரதா ஸமிதி

தீவிரமாகக் கடவுள் நாட்டம் கொள்வது மானுடப் பிறவியின் சீரிய குறிக்கோள் ஆகும். ஆண்பாலர் பெண்பாலர் ஆகிய இரு பாலர்க்கும் இது ஒப்ப முடிந்த லட்சியமாகும். கடவுள் நாட்டம் அதிகரிப்பதற்கு ஏற்ப உலக ஆசைகள் தாமாக மறைந்துபட்டுப் போகின் றன. உலக ஆசைகளை அறவே ஒழித்தவர் துறவியர் ஆகின்றனர். பெண்பாலர்க்கிடை யில் இக்காலத்தில் தீவிரமான துறவியாகத் திகழ்ந்தவர் அன்னை ஸ்ரீ ஸாரதா தேவியார் என்பது உலகு அறிந்த விஷயமாகும். அவ ரைத் துறவறத்துக்கென்றே ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் ஆயத்தப்படுத்தினார். அன்னை யாரின் பாரமார்த்திகப் பெருவாழ்வு உலக மக்களுக்கு ஓர் ஒப்பற்ற அருள்விருந்து ஆகி றது. அருள் கனிந்த இந்த ஞானத் தாயின் பெயரில் சேலம் ஸ்ரீ ஸாரதா ஸமிதி நிறுவப் பெற்றுள்ளது. ஸமிதி என்னும் சொல் திருக் கூட்டம் எனப் பொருள்படுகிறது.

பழங்காலத்தில் பாரமார்த்திக வாழ்வு வாழ விரும்பிய பெண்பாலர்க்குக் கன்னிமாடம் என் னும் ஸ்தாபனம் அமைத்துவந்தனர். அக் காலத்தில் பண்பட்டிருந்த பெற்றோர்கள் அதற்கு முற்றிலும் சம்மதம் கொடுத்து வந்த னர். ஆனால் இடைக்காலத்தில் சமுதாயத் தின் சூழ்நிலை கன்னிமாடத்துக்குப் பிரதிகூல மாயிருந்தது. ஆதலால் அந்த ஸ்தாபனம் மறைந்துபட்டுப் போயிற்று. மகளிர் மணம் புரிந்தே ஆகவேண்டும் என்னும் கட்டுப்பாடு வந்தது. ஆனால் திருவருளின் சகாயத்தால் பழைய அனுகூலமான நிலைமை மீண்டும் வந்து கொண்டிருக்கிறது. அதைப் பயன்படுத்துவது மக்களின் கடமையாகும்.

இக்காலத்தில் கத்தோலிக்க கிறிஸ்தவர் களுக்கிடையில் துறவு பூண்டுள்ள மகளிர் ஸ்தாபனம் (nunnery) உலகெங்கும் நன்கு நடைபெற்று வருகிறது. அம்மதத்தைச்சேர்ந்த தாய் தந்தையர் மனமுவந்து தங்கள் புதல்வி

யர்களுள் ஒருத்தியைக் கன்னிமாடத்துக்குச் சீதனம் கொடுத்து ஒப்படைக்கின்றனர். கல்வித்துறையிலும் மருத்துவத் துறையிலும் அம் மகளிர் கூட்டம் அரும்பணியாற்றி வருகிறது. ஹிந்து சமுதாயத்திலும் அத்தகைய ஸ்தாபனம் விரைவில் வருவது இன்றைக்கு அவசியமாகிறது.

பாரமார்த்திகப் பெருவாழ்வு வாழ விரும்புகிற ஆடவர்களுக்குத் திருப்பராய்த்துறையில் ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம் வசதியளிக்கிறது. அதேபாங்கில் மகளிர்களுக்குச் சேலம் ஸ்ரீ ஸாரதா ஸமிதி வசதியளிக்கிறது. இந்த ஸமிதியைத் தாய்மார்கள் சிலர் நிர்வகித்து வருகிறார்கள். அவர்கள் உலக பந்தபாசங்களிலிருந்து முற்றும் விடுபட்டவர்கள் ஆகிறார்கள். சேலம் ஸ்ரீ ஸாரதா மகளிர் கல்லூரி, ஸ்ரீ ஸாரதா ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி, ஸ்ரீ ஸாரதா பெண்கள் உயர்நிலைப்பள்ளிக்கூடம், ஸ்ரீ ஸாரதா பாலமந்திர் ஆகிய கல்விச் சாலைகளின் நிர்வாகங்கள் அவர்கள் ஆதிக்கத்தில் இருந்து வருகின்றன.

ஸ்ரீ ஸாரதா ஸமிதியில் எத்தகைய மாதர்கள் சேர்த்துக் கொள்ளப்படுகிறார்கள் என்பதன் விளக்கம் வருமாறு :—

(1) விவாகம் செய்துகொள்ள விருப்பமில்லாத வனிதைகள் இதில் சேர்த்துக்கொள்ளப்படுவார்கள். அதற்கு அவர்கள் தங்கள் பெற்றோரின் அனுமதி பெறவேண்டும்.

(2) குழந்தைகள் இல்லாத கைம்பெண்கள் தங்கள் வசத்தில் இருக்கிற செல்வத்தை ஸமிதியில் சேர்த்துவிட்டு அதில் சேர்ந்துகொள்ளலாம்.

(3) கணவன்மார்களால் கைவிடப்பட்ட பெண்கள் ஸமிதியில் சேர்த்துக்கொள்ளப்படுவார்கள்.

ஸமிதியில் சேர்ந்துகொள்ள விரும்புபவர்கள் தங்கள் வரலாறுகளைப் பற்றிக் கடிதம் எழுத வேண்டும். அம்முறையில் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் மாத்திரமே ஸமிதியில் சேர்த்துக் கொள்ளப்படுவார்கள்.

ஸ்ரீ ஸாரதா ஸமிதியில் சேர்ந்துகொண்டவர்களுக்கிடையில் ஜாதி மத வேற்றுமை கிடையாது.

ஸமிதியில் அங்கத்தினராகச் சேர்ந்துகொண்டவர்களுக்குப் பாரமார்த்திக வாழ்வு, கல்வி, ஸ்தாபன நிர்வாகம் ஆகியவைகளில் தக்க பயிற்சியளிக்கப்படும்.

அங்கத்தினர்களை ஆயுட்காலம் முழுதிலும் நன்கு பரிபாலித்துவர ஸமிதி கடமைப்பட்டிருக்கிறது.

சேலம் ஸ்ரீ ஸாரதா ஸமிதியானது திருப்பராய்த்துறை ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனத்தின் லட்சியத்தைக் கடைப்பிடித்து வருகிறது. அதாவது ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர், அருள் அன்னை ஸ்ரீ ஸாரதாமணி தேவியார், சுவாமி விவேகானந்தர் ஆகிய பெருமக்கள் புகட்டிய பெருநெறியை வாழ்க்கையில் நடைமுறையில் கொண்டுவருவது இந்த இரண்டு ஸ்தாபனங்களின் லட்சியமாகும்.

ஸ்ரீ ஸாரதா ஸமிதியைப்பற்றி மேலும் அறிந்துகொள்ள விரும்பும் தாய்மார்கள் கீழே கண்டுள்ள விலாசங்களுக்கு எழுதலாம்.

1. யதீஸ்வரி சாரதாப்ரியா
தலைவி, ஸ்ரீ ஸாரதா ஸமிதி,
அழகாபுரம், சேலம்-4.

2. சுவாமி சித்பவானந்தர்
ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்,
திருப்பராய்த்துறை-639 115, திருச்சி ஜில்லா.

---

# செய்திகள்

**நிகழ்பவை :**

மே மாதம் 30 ஆம் தேதி செவ்வாய்க்கிழமையன்று ஸ்ரீ விவேகானந்த வித்யாவன குருகுலத்துக்குத் தேவையான புதிய மாணவர்கள் 4, 5, 6, 7 வகுப்புக்களுக்குப் பரீட்சை செய்து தேர்ந்தெடுக்கப்படுவார்கள். அன்று காலை 9-00 மணிக்குள் புதிதாகச் சேரும் மாணவர்கள் குருகுலத்துக்குவந்து பரீட்சை எழுதத் தயாராக இருக்கவேண்டும்.

# ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்
## இயற்றிய நூல்கள்

| | | |
|---|---|---|
| திருவாசகம்-மூன்றாம் பதிப்பு | | |
| பிரசார விலை | | ரூ. 14-00 |
| ஸ்ரீமத் பகவத்கீதை-பனிரெண்டாம் பதிப்பு | | |
| பிரசார விலை | | ... 12-00 |
| ஞானயோக விளக்கம் | | ... 8-00 |
| ராஜயோக விளக்கம் | | ... 8-00 |
| கர்மயோக விளக்கம் | | ... 7-00 |
| பக்தியோக விளக்கம் | | ... 6-00 |
| பரமஹம்சரின் பெருமை | | ... 6-00 |
| விவேகானந்த விவரணம் | | ... 4-00 |
| ஸ்ரீ விவேகானந்தர் ஜீவிதம் | | ... 4-00 |
| விவேகானந்த உபநிஷதம் | | ... 4-00 |
| கடவுளின் வடிவங்கள் | | ... 4-00 |
| சந்தேகம் தெளிதல் பாகம்-I | | ... 3-50 |
| சந்தேகம் தெளிதல் பாகம்-II | | ... 3-50 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேச மஞ்ஜரீ | | |
| ஆறாம் பதிப்பு-பிரசார விலை | | ... 2-75 |
| தினசரி தியானம்-பதினான்காம் பதிப்பு | | |
| (பிளாஸ்டிக் உறையுடன்) பிரசாரவிலை | | ... 2-75 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணர் சரிதம் | | ... 2-00 |
| தேவரகசியம் (முதலிய கதைகள்) | | ... 2-00 |
| ஸ்ரீ சாரதா தேவியாரது சரிதம் | | ... 2-00 |
| கண்ணன் என்னும் கடவுள் | | ... 2-00 |
| **தாயுமானவர் இயற்றிய** | | |
| பரிபூரணானந்தம் | விரிவுரை | ... 3-00 |
| ஆனந்தமானபரம் | ஷை | ... 3-00 |
| சுகவாரி | ஷை | ... 3-00 |
| மௌனகுரு வணக்கம் | ஷை | ... 3-00 |
| எங்கும் நிறைகின்றபொருள் | ஷை | ... 2-50 |
| கருணாகரக்கடவுள் | ஷை | ... 2-00 |
| பரசிவ வணக்கம் | ஷை | ... 0-50 |
| விரதவீரர் பீஷ்மர் | (நாடகம்) | ... 1-50 |
| பஜனைப் பாடல்கள் | | ... 1-50 |
| சந்நியாசி | | ... 1-25 |
| குழந்தைகளின் களிக்கூடம் | | ... 1-00 |
| இராவண தத்துவம் | | ... 1-00 |
| சகோதரி நிவேதிதை | | ... 1-00 |
| ஹரிச்சந்திரன் | (நாடகம்) | ... 1-00 |
| காயத்ரீ | | ... 1-00 |
| வாலிமோக்ஷம் | (நாடகம்) | ... 1-00 |
| தவப்புதல்வர்கள் | (நாடகம்) | ... 1-00 |
| ஏகலைவ்யனின் குருபக்தி | (நாடகம்) | ... 1-00 |
| அறம் வளர்த்த நம்பி | | ... 0-95 |
| நோய்க்கு இடம் கொடேல் | | ... 0-80 |
| நன்மக்களைப் பெறுதல் | | ... 0-80 |
| தானவீரன் கர்ணன் | (நாடகம்) | ... 0-80 |
| பாண்டவ கௌரவ பெருமை | (நாடகம்) | ரூ. 0-80 |
| பாதுகா பட்டாபிஷேகம் | (நாடகம்) | ... 0-75 |
| இறை வணக்கம் | | ... 0-75 |
| *ஆத்ம சக்தி | | ... 0-75 |
| செத்தவர்கள் நம்மோடு பேசுகிறார்களா? | | ... 0-75 |
| *மனிதனது நிஜசொரூபம் | | ... 0-70 |
| *சக்தி தத்துவம் | | ... 0-70 |
| *சிவ தத்துவம் | | ... 0-70 |
| பிரஹ்லாதன் | (நாடகம்) | ... 0-65 |
| பார்வதி, லக்ஷ்மி, சரஸ்வதி கர்வபங்கம் | | ... 0-65 |
| *ஈசன் எங்கும் நிறைந்துள்ளான் | | ... 0-60 |
| இந்து மதமும் கிறிஸ்துவ மதமும் | | ... 0-60 |
| *ஆலய வழிபாடு | | ... 0-60 |
| சைவன் யார்? | | ... 0-50 |
| *சூரிய நாராயணன் | | ... 0-50 |
| *முருகக் கடவுள் | | ... 0-50 |
| *விஷ்ணு தத்துவம் | | ... 0-50 |
| தெய்வீக மகிமைகள் | | ... 0-50 |
| கர்மகாண்டம் எது? ஞானகாண்டம் எது? | | ... 0-50 |
| மார்க்கண்டேயன் | (நாடகம்) | ... 0-40 |
| தபோபலன் | (நாடகம்) | ... 0-40 |
| *கணபதி | | ... 0-40 |
| நன்னெறிகளும் அருள்வாக்குகளும் | | ... 0-40 |
| வர்ணாச்ரம தர்மம் | | ... 0-30 |
| அருள் விருந்து 1 to 25 ஒவ்வொன்றும் | | ... 0-30 |
| The Bhagavad Gita (9th Imp.) | | ... 15-00 |
| The Indian National Education | | ... 8-00 |
| Sri Lalithambika Sahasranama Stotram | | ... 8-00 |
| Ramakrishna Lives Vedanta | | ... 8-00 |
| Facets of Brahman or The Hindu Gods | | ... 5-00 |
| Daily Divine Digest (with plastic-cover) | | ... 4-20 |
| Mahabharata (with plastic cover) | | ... 4-50 |
| Ramayana | (do) | ... 4-00 |
| The Man Making Message of Vivekananda (with plastic cover) | | ... 3-00 |
| The Bhagavad Gita (Small Size) (With plastic cover) | | ... 3-00 |
| Sri Vishnu Sahasranama Stotram | | ... 2-50 |
| Holy Bible—In the Light of Vedanta | | ... 1-50 |
| *Introducing the Gita | | ... 1-50 |
| *Key to Higher Life | | ... 0-75 |
| *The Teacher | | ... 0-60 |
| *The Student | | ... 0-45 |

தேவையான புத்தகங்களுக்கு உரிய விலையுடன் தபால் கட்டணத்திற்காக ஸ்ரீமத் பகவத்கீதைக்கு ரூ. 3-00ம் மஞ்ஜரீக்கு ரூ. 2-40ம் தினசரி தியானத்திற்கு ரூ. 2-20ம் மற்ற வெளியீடுகளுக்கு ரூ. 2-50 முதல் 3-50 வரை சேர்த்து அனுப்புங்கள்.

*இக்குறியிட்ட புத்தகங்கள் ஏனைய பெரிய புத்தகங்களில் அடங்கியுள்ளன.

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம், திருப்பராய்த்துறை-639 115, திருச்சி Dt.

## குருகுலப் பள்ளியில் மாணவர்களைச் சேர்க்க விவரம்

திருப்பராய்த்துறை ஸ்ரீ விவேகானந்த வித்யாவன குருகுல உயர்நிலைப்பள்ளியில் ஸ்டாண்டர்டுகள் IV முதல் X வரையிலும் உள்ளன. எட்டாம் ஸ்டாண்டர்டிலும், அதற்கு மேலான ஸ்டாண்டர்டுகளிலும் புதிய மாணவரைச் சேர்த்துக்கொள்வதில்லை. IV, V, VI, VII ஸ்டாண்டர்டுகளில் புதிய மாணவர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். போதனை மொழி தமிழ்.

குருகுலத்தில் மாணவரைச் சேர்க்க விரும்புவோர் மே மாதம் 30ஆம் தேதி காலையில் 9 மணிக்குள் பையன்களுடன் இங்கு வரவேண்டும். விரிவான விவரம் வேண்டுவோர் காரியதரிசி, ஸ்ரீ விவேகானந்த வித்யாவன குருகுலம், திருப்பராய்த்துறை 639 115, திருச்சி ஜில்லா என்ற முகவரிக்கு ஐம்பது பைசா ஸ்டாம்பு அனுப்பி 'வித்யாவனச் சட்டதிட்டங்கள்' என்ற சிறு புத்தகத்தைப் பெற்றுப் பார்த்துக்கொள்ளலாம்.

---

## விவேகானந்த கல்லூரி

திருவேடகம் மேற்கு, சோழவந்தான் R S. மதுரை ஜில்லா. Pin. 624 217.

இக்கல்லூரி குருகுல முறையில் ஏழு ஆண்டுகளாக நடைபெற்று வருகிறது. வாழ்க்கைப் பயிற்சி இதனுடைய சிறப்பு அம்சமாகும். இங்குக் கீழ்க்கண்ட வகுப்புகள் நடைபெறுகின்றன.

**I. P. U. C.**

Part I Tamil/Sanskrit Part II English

Part III 1. Mathematics, Physics & Chemistry
2. Physics, Chemistry & Biology
3. (i) Advanced English, Economics and Commerce (English Medium)
(ii) Advanced Tamil, History & Commerce (Tamil Medium)

**II. THREE-YEAR DEGREE COURSES (SEMESTER SYSTEM)**

**B. Com.** Optional Subjects : 1. Costing. 2. Income Tax Law and Practice.

Part I Tamil/Sanskrit Part II English

Part III 1. **B. A.** Main : Economics, Ancillary : Elements of Economic Statistics, History of India II
2. **B. Sc.** Main : Physics, Ancillary : Mathematics & Chemistry
3. **B. Sc.** Main : Zoology, Ancillary : Chemistry & Botany

சமஸ்கிருதம் ஆரம்ப எழுத்துக்களிலிருந்து P. U. C, Degree மாணவர்கட்கு கற்பிக்கப்படும். விண்ணப்பப்படிவமும் விவரணமும் பெற விரும்புவோர் கல்லூரி முதல்வருக்கு ரூ. 3-50 மணியார்டர் செய்து அல்லது ரூ. 3-00 நேரில் செலுத்தி பெற்றுக்கொள்ளலாம். எந்த வகுப்பில் சேரவேண்டும் என்பதைக் குறிப்பிடவேண்டும். தகுதி வாய்ந்த மாணவர்களுக்கு சதாசிவம் சத்கைங்கரியம் டிரஸ்டினின்றும் பாண்டிச்சேரி திரு. விஸ்வநாதன் நிதியினின்றும் நிர்வாகத்தினரால் உதவித்தொகை வழங்கப்பெறும். சிலருக்கு உணவும் உறைவிடமும் இலவசமாக அளிக்கப்பெறும். நிர்வாகத்தினரின் உதவித்தொகை பெற விரும்புவோர் ரூ. 1-00 சேர்த்துச் செலுத்தி அதற்கான விண்ணப்பப் படிவத்தையும் பெற்றுக்கொள்ளலாம்.

Edited by SWAMI NITHYANANDA,
Printed & Published by Swami Yogananda at Tapovanam Printing School, Tirupparaitturai, Tiruchi Dt.